# வேழவேந்தன் கவிதைகள்

ஆக்கம்:

கலைமாமணி, கவிவேந்தர்

**கா. வேழவேந்தன்** பி.ஏ., பி.எல்.,

**வேந்தர் பதிப்பகம்**

103, டாக்டர் இராதா கிருட்டிணன் சாலை,

மயிலாப்பூர், சென்னை - 600 004,

தொலைபேசி : 8572976

முதற் பதிப்பு: சனவரி, 1963
இரண்டாம் பதிப்பு: மே, 1972
திருத்திய மூன்றாம் பதிப்பு: திசம்பர், 1998



**விலை: ரூ.60.00**

## படையல்

இருந்த இடத்திலிருந்தே எங்கோ இருப்போரின் பசிபோக்கும் எழில்மிகு வயல்போல், எனக்கு மட்டும் உயர் கல்வியூட்டிய என் உடன் பிறந்தவர்களான **முனிவேல், கிருட்டிணன், ஆதிகேசவன்** ஆகியோருக்கு இக்கவிதை நூலை அன்புடன் படைக்கின்றேன்.

நா.ர. சந்திரசேகரன்.

டாக்டர் **நாவலர் இரா. நெடுஞ்செழியன்,** எம்.ஏ.

அளித்த

## அணிந்துரை

'வேழவேந்தன் கவிதைகள்' எனும் கவிதை மலர்க்கொத்து ஒன்று என் கையில் தரப்பட்டது. அதனைக் கண்ணாலும், கருத்தாலும் நுகர்ந்தேன். அது பொருள் வளம் மிக்கதாய்ச், சொல்லினிமை கொண்டதாய், அணியழகு மிளிர்வதாய்க், கருத்து மணம் கமழ்வதாய் இருக்கக் கண்டு உளம் பூரித்துப் போனேன். அந்த மலர்க்கொத்துதான் இப்பொழுது உங்கள் கையில் இருப்பது. நீங்களும் உளம்பூரித்து உவகை இன்பம் பெற வேண்டும் என்பதற்காகவே இதனை உங்களுக்கு அறிமுகப்படுத்த முனைந்துள்ளேன்.

பல்வேறு வண்ணக் கருத்துக்களைக் கவிதை மலர்களாக உருவாக்கி, அவற்றை ஒரு பூங்கொத்தாகத் தொடுத்துக் கொடுத்திருப்பவர் தோழர் வேழவேந்தன் அவர்கள் ஆவார்.

அவர்

**சிறந்த சொற்பொழிவாளர்,**<br>
**சீரிய எழுத்தாளர்,**<br>
**நல்ல பண்பாளர்,**<br>
**உணர்ச்சி மிக்க சீர்திருத்தக்காரர்,**<br>
**எழுச்சி மிக்க விடுதலை வீரர்,**<br>
**புதிய வழக்கறிஞர்,**<br>
**இளங் கவிஞர்,**

என்று பலராலும் பாராட்டப் பெறுபவர்.

கவிஞர் வேழவேந்தன் அவர்கள், பல்வேறு வகைப்பட்ட குறிக்கோள்களை உட்பொருள்களாகக் கொண்டு, கவிதைகள் பலவற்றைப் பல்வேறு பொழுதுகளில் இயற்றி, அவற்றை யெல்லாம் ஒன்றாகத் திரட்டி நம்மிடம் தந்துள்ளார்.

**கவிஞர் வேழவேந்தன் தேசியக்கவிஞர் பாரதியார், புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் ஆகியோரின் பரம்பரை வழியில் வந்த சீரிய கவிஞர் என்பதை இந்நூலின் மூலம் நிலைநாட்டிக் கொண்டுவிட்டார்.**

கவிஞர் வேழவேந்தனின் கவிதைகளில், அரிய - அழகிய - இனிய - எளிய தமிழ்ச் சொற்கள் தங்குதடையின்றி, அருவியின் வீழ்ச்சியென, ஓசையெழுப்பிப், பாய்ந்து, வீழ்ந்து, பட்டுத் தெறித்து, விரைந்து ஓடுகின்றன.

குற்றாலம் அருவியில் மூழ்கும் உடல் எவ்வளவு இன்பம் பெறுகிறதோ, அவ்வளவு இன்பத்தைக் கவிஞர் வேழவேந்தனின் கவிதைகளில் மூழ்கும் உள்ளமும் பெறுகிறது.

இவர் கவிதைகளில் நாட்டு விடுதலை, மொழிவளர்ச்சி, பகுத்தறிவு நெறி, சமூகச் சீர்திருத்தம், இயற்கையழகு, காதல், வீரம், கடமை, பொழுதுபோக்கு போன்ற பல திறப்பட்ட பொருள்கள், கற்பனைத் திறனால் பொலிவும் வலிவும் ஆக்கமும் ஊக்கமும் பெற்றுத் திகழ்கின்றன. கவிதைகளில் உவமை நயமும், சொல்லழகும், பொருட் செறிவும், கற்பனையோட்டமும் நெடுக நன்கு மிளிர்கின்றன.

'உரித்த ஆரஞ்சுபோல் உலகம் முகிழ்த்தது,'

'மலைப்பெண்ணாள் முத்தாரம் அருவி,'

'கரிய பாறை கைகால்கள் முளைத்ததுபோல்
பிளிறும் யானை,'

'முடங்கிய புழுவின் வாழ்க்கை,'

'பஞ்சுடல் வடிவம்,'

'செவ்வாழை உடலம்,'

'ஈச்சமர நிழலைப்போல் மாறும் எங்கள்
இதயமற்ற சமுதாயப் போக்கு,'

'பிய்ந்த வடைபோன்று நிலவோன்,'

'நீந்திவந்த வெண்ணெய்நிலா,'

'குலையறுத்த வாழையைப்போல் நீர்பெ ருக்கி,'

'பனைமரத்து நுங்கைப்போல் தித்திக்கும் இதழ்,'

'வளம்நிறைந்த தஞ்சைநிலக் கரும்பைப்போல்,'

'உரித்தமுந்திரி உருவில்நடந்த மூளிநிலவு,'

'சருகொன்று புயற்காற்றிற் பறப்ப தைப்போல்,
சளைக்காமல் கருப்புக்கார் சென்னை நோக்கி
விரைவாகப் பறந்ததங்கே,'

'விழுகின்ற நீரையெல்லாம் ஏற்றுக் கொள்ளும்
கரைகாணாக் கடல்போலே உள்ள சென்னை,'

'புதர்முயல் இடியைக்கேட்டு,
போயொளிந்திருத்தல் போலே,'

'முதிராத பனநுங்கைப் போலே உள்ள
முறைமகள்,'

'சதிராடும் தென்றலைப்போல் சுழலும் அந்தத்தையலை,'

'வாயவிழா மொட்டைப்போல் இருந்த செல்வன்,'

'தீமை எங்கிருப்பினும் ஓமப்பொடிபோல் உடைப்போம்,'

'சிறகடித்து வான்மீதில் கொக்குக் கூட்டம்,
சீர் அணியாயச் செல்வதைப்போல் நடந்தார்,'

என்பன போன்ற உவமை நயங்களைக் கவிஞர் கையாளும் திறம் படித்து இன்புறுதற்குரியதாகும்.

குடும்பத்தை ஒரு நூல்நிலையமாக்கி, அதில் தந்தையைக் 'குறள்நூ'லாகவும், தாயை 'அன்புநூ'லாகவும், இல்லாளை 'அகப்பொருள் நூ'லாகவும், குழந்தையை 'இன்பநூ'லாகவும் கவிஞர் குறிப்பிடும் பாங்கு மகிழ்ச்சிக்குரியது.

'விளைகின்ற தானியங்கள் எஞ்சி விட்டால்,
மிஞ்சியதைப் பசித்தவர்க்கே அளித்தி டாமல்
சுளையாகக் கடலினிலே எறியும் பாழும்
சுயநலத்துக் கும்பல்......'

என்றும்,

'தெற்கைப் பொன்கொழிக்கச் செய்திட்டாய்! எனவே
ஏட்டால்
'பொன்னி' எனச் சீராட்டப் பெற்றாய்! வாழி!'

என்றும்,

'மொழிவாழ, இனம்வாழ, நாடு வாழ
மூச்சுவிட்டோர் நடுகல்லே இன்பச் சின்னம்'

என்றும்,

'பயிர் செழிக்க உரம்வேண்டும்; அதுபோல் இன்பப்
பழம்சுவைக்க உள்ளத்தில் உரந்தான் வேண்டும்;
உயிர்இன்றே பிரியட்டும் மகிழ்ச்சி! என்றே
உறுதியுடன் வாழ்வதுதான் இன்பம், இன்பம்!'

என்றும்,

'நல்லோர் எள்ளுகின்ற நிலையிலுள்ள இந்தத் தேர்வு
ஏன்வேண்டும்? ஏன்வேண்டும்? யார்க்கு வேண்டும்?'

என்றும்,

'எட்டியைப்போல் தனியுடமை பேசுபவன் மடையன்,
அன்றித் தன்னுடைமை, பொதுவுடைமை என்போன்
மட்டும்
மனிதருக்குள் புகழுடைமை சேர்த்துச் சென்றான்;
மற்றவரின் பெயரெல்லாம் எங்கே? எங்கே?'

என்றும்,

'ஏட்டுத் துடுப்பாலே இலக்கியத்துப் படகை அன்று
தொலைதூரம் செலுத்தியவள் பெண்தான்!'

என்றும்,

'மதுவெள்ளம் வண்டு வேண்டின்
மகிழம்பூ எங்கே போகும்?
உதவிகள் கோடி செய்ய
உண்டம்மா எண்ணம்; ஆனால்
நிதியில்லை; கதியு மில்லை
நீ சென்று வருவாய் என்றேன்,'

என்றும்,

'முதுகெலும்பைப் பெற்றதிரா விடத்தார் இங்கே
முழுஉரிமைத் தாயகத்தை ஆளும் போது
சதிராடும் இப்பேயைச் சட்டத் தாலே
சல்லிசல்லியாய்க் கிழித்துச் சாம்ப லாக்கிக்
குதித்தோடும் கங்கையிலே கொண்டு சென்று
குளிர்நீரில் கரைத்துவிட்டுத் திரும்பா ரோ? நல்
விதிச்சட்டம் 'வள்ளுவ'மாய் மாறும் போது
வேற்றுமைகள் ஏதப்பா? பறந்தி டாதா?'

என்றும் கூறப்பட்டுள்ள கவிதை யடிகள் போன்றவற்றில் கருத்துமணம் ஓங்கிக் கமழ்வதைக் காணலாம்.

மங்கை நல்லாளை ஓர் உயிர்க்காட்சி சாலைக்கு ஒப்பிட்டு, அவளது நடையிலே 'அன்ன'மும், அவளது ஆடலிலே 'மயி'லும், அவளது கனிமொழியிலே 'கிள்ளை'யும், அவளது விழியிலே 'மா'னும், அவளது கனிமுத்தத்தில் 'வெண்புறா'வும் தென்படுவன போலக் கவிஞர் கூறியிருப்பது, மகிழ்ச்சி யூட்டும் சிறந்த கற்பனையாகும்.

அறிஞர் அண்ணா அவர்களை,

**'நெற்றியில் அறிவைத் தேக்கி,**
**நெஞ்சத்தில் வீரம் தேக்கி,**
**வற்றாத நாளில் நாளும்**
**வளமூறும் கருத்தைத் தேக்கிச்**
**சுற்றாமல் சுற்றும் கண்ணில்**
**துடிப்பினைத் தேக்கி, மண்ணில்**
**கற்றவர் திகைக்கும் வண்ணம்**
**காண்பவர் ஒருவர் அண்ணா!'**

என்று அறிமுகப்படுத்தும் தன்மை போற்றிப் பாராட்டு வதற்குரியதாகும்.

**கவிஞர் வேழவேந்தனின் கவிதைகள் பல பரிசுப் போட்டிகளில் நின்று, வெற்றி வாகை சூடி, வெற்றிப் பதக்கங்களையும், கோப்பைகளையும் ஈட்டித்தந்தவை என்பதிலிருந்தே அவரது கவிதைகளின் சிறப்பை எவரும் நன்கு தெளியலாம்.**

**கவிஞர் வேழவேந்தனின் கவிதைவிருந்தைப் பருகி இன்புற்றுத் திளைக்கத் தமிழ்ப் பெருங்குடியினர் அனைவரும் முன்வருவார்களாக!**

வாழ்க கவிஞரின் உள்ளம்! வெல்க அவர் தம் தொண்டு!

16.12.62 இங்ஙனம்,
சென்னை-5.

இரா. நெடுஞ்செழியன்.

# சோலை முகப்பில்...

**நெடிய சிந்தனைக்குப் பின்னால், நெஞ்சின் அடித்தளத்திலிருந்து பீறிட்டெழுந்து, முடுகிப் பாய்ந்து ஓடி வருவதே கவிதை.**

**இந்தக் கருத்தைச் சொன்னால் எந்த முகம் மலருமோ, எந்த முகம் சுருங்குமோ என்று அது எண்ணிப் பார்த்துக் கொண்டிருப்பதில்லை.**

அருவி செங்குத்தாக வீழும்போது, உருளைகள் விரைந்து உருள்வதால் உருவாகும் மின்னாற்றலால் எரிகிறது விளக்கு!

**உணர்வலைகள் உடலின் ஒவ்வொரு நரம்பணுக்களிலும் பாய்ந்து, உள்ளத்திலே ஒருவகைக் கொதிப்பை ஏற்படுத்தும் போது மின்னலிடுகிறது கவிதை!**

விழிகள் மூடிக்கிடக்கலாம்; ஆனால் வீறுடன் வெளியேறும் கவிஞனின் கற்பனைப் பறவை எட்டாத விண்வெளிக்கும் சென்று தாவிப்பறப்பதற்குத் தடைதான் ஏது? கவிஞர் மில்ட்டனின் 'இழந்த சொர்க்க'மும், திரு.வி.க.வின் 'முதுமை உளற'லும் விழிமூடிக்கிடந்த நேரத்தில் பிறந்த ஒளிமணிகளே!

விலங்கு கால்களை இறுக்கிப் பூட்டிவைக்கலாம்; ஆனால் கவிஞனின் உள்ளம் உலகெல்லாம் நடைபோட்டு உலவிவரும் என்பதற்கு 'ஆஸ்கார் ஒயில்'டின் கவிதைகள் சான்றாக நிற்கின்றன.

**கால வரையறை என்பது உடலுக்கு இருக்கலாம்; ஆனால் உயரிய கவிதை சாவதில்லை. ஆகவே கவிஞன் இறந்தபிறகும், கவிதையுருவில் மண்ணின்மீது நடமாடிக் கொண்டேயிருக்கிறான் என்பதே திண்ணம்.**

பேரழகி 'பாஸ்டர்' என்பவளை எழுத்துலக மேதை கிப்பனும், மருத்துவமேதை ஒருவரும் விரும்பினார்கள்.

தலையீடு நெருக்கடியை உருவாக்கியபோது, மருத்துவமேதை, ''பாருங்கள், கிப்பன்! நீங்கள் அடிக்கடி அவளிடம் இலக்கிய நயத்தோடு பேசித் தலைவலியை உண்டாக்காதீர்கள்; அப்படி அவள் வலியால் கதறும்போது நான்தான் அவளுக்கு மருந்தளித்துக் காப்பாற்ற வேண்டியிருக்கும்!'' என்று நையாண்டியுடன் கூறினார். உடனே கிப்பன், ''ஆனால் உங்கள் பாழும் மருந்தைக் கொடுத்து அவளைக் கொன்று விடாதீர்கள்; நான்தான் என் எழுதுகோலால் அவளை அமரத் தலைவியாக்க வேண்டியிருக்கும்,'' என்று புன்னகையுடன் பதிலளித்தார்.

**கவிதை இலக்கியம் புதிய கடவுள்களையும் அழியாத படைப்புகளையும் உருவாக்குகிறது.**

'ஹெலன்' என்ற பேரழகி இருந்தாள் என்பதை 'ஹோமர்' இல்லையென்றால் எப்படி உணர்ந்திருக்கமுடியும்?

'கண்ணகி'யின் கற்பு மாண்பை 'இளங்கோ' பிறந்திருக்காவிட்டால் அறியப் போவது யார்?

'சகுந்தலை'யின் பெருமையை, 'காளிதாச'னின் எழுத்தாணி இல்லையேல் எப்படி உணர்ந்திருப்போம்?

ஆகவே,

'பாட்டினைப்போல் ஆச்சரியம்,
பாரின்மிசை இல்லையடா!'

என்று பாரதி சொன்னதில் என்ன மிகையிருக்கிறது?

எனவேதான் எழுதவேண்டுமென்ற எண்ணம் நெஞ்சில் எழுந்தவுடன் கவிதை வடிவத்தை நான் விரும்பினேன். 'கவிதை படிப்பவர் குறைவாயிற்றே', என்று குறைப்பட்டுக் கொண்டார்கள் சிலர்.

நாவற்கனியை வாயிற் போட்டவுடன் இனிக்கத்தான் செய்யும். ஆனால் கொஞ்ச நேரத்தில் நாவின் கறையைத் தவிர எஞ்சி நிற்கும் பயன் ஏது?

நெல்லிக்கனி உண்பதற்கு அவ்வளவு சுவையற்றிருக் கலாம். ஆனால் தின்று முடித்தபிறகும், நாவைச் சுழற்றும் போதெல்லாம் இனிப்பதோடன்றி, நல்ல சத்தும் கொண்டதாகும். கவிதை நெல்லிக்கனியைப் போன்றது என்பது என் கருத்து.

**கபிலரிடம் அகவற்பாவையும், வள்ளுவரிடம் குறள் வெண்பாவையும், திருத்தக்க தேவரிடம் விருத்தத்தையும், செயங்கொண்டாரிடம் தாழிசையையும், புகழேந்தியிடம் வெண்பாவையும், திருநாவுக்கரசரிடம் கட்டளைக் கலித்துறையையும், அருணகிரி நாதரிடம் வண்ணப் பாடல்களையும், இராமலிங்கரிடம் எண்சீர் விருத்தத்தையும் காலம் வற்புறுத்திப் பெற்றுக் கொண்டதென்றே நான் கருதுகிறேன்.**

**கவிதை மாளிகையின் அடித்தளம் 'இலக்கணம்' என்பதும், காரையும் சுண்ணமும் 'உவமை' என்பதும், கற்களே 'கருத்து' என்பதும், 'சொற்செட்'டே கூரை யென்பதும் என் தாழ்மையான கருத்தாகும். இதில் ஒன்று குறைந்துவிட்டாலும் மாளிகை விழுந்துவிடும் என்ற அச்சம் எனக்குண்டு.**

**'தமிழேறு'** என்ற குறுங்காவியம் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது.

'Every country is my country;
Every man is my kinsman'

**என்ற பரந்த தத்துவத்திற்கு நாம்தான் சொந்தக்காரர்கள் என்பதை அதில் வற்புறுத்தியிருக்கிறேன். ஆனால் மொழி, இன, பண்பாட்டுரிமைகள் ஒவ்வொரு மனிதனுக்கும் உயிர் மூச்சு என்பது என் வாதமாகும். திருக்குறட் சமயம் வைய முழுதும் பரவ வேண்டும்; தித்திக்கும் தமிழை உலகின் ஆறு கண்டங்களும் உணர வேண்டும் என்ற என் பெருவேட்கையை வெளிக்காட்டிக் கொண்டிருக்கிறேன்.**

இதில் உள்ள பல கவிதைகள் நாள், வார, திங்கள் ஏடுகளில் வெளிவந்தவை. இவற்றைத் தொகுத்து வெளியிட அருள்கூர்ந்து அனுமதி வழங்கிய அந்த ஏட்டாசிரியர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலுக்குச் சீரும், சிறப்பும் அளிப்பது நாவலர் இரா.நெடுஞ்செழியனார் அவர்கள் அளித்தருளிய அணிந்துரை யாகும். அவர்கள் தமக்கிருக்கும் பல்வேறு பணிகளிடையே, இந்நூலை முழுக்க முழுக்க ஆழ்ந்து படித்து, அவர்களுக்கே உரித்தான ஈடு எடுப்பற்ற நடையில் அற்புதமான அணிந்துரை

வழங்கியிருக்கிறார்கள். தமிழ்ச் சோலையிலே புதுச் செடி தழைக்கட்டும் என்று வாழ்த்தும் மழை உள்ளம் கொண்ட நாவலருக்கு எந்தச் சொற்களால் நான் நன்றி கூறப்போகிறேன்?

அதேபோல் என் நன்றிக்குரிய அரிய பெருந்தகையாளர் 'சாந்தி நூலக' முத்துராமன் அவர்கள் ஆவார். இயற்கையிலேயே தொழிலார்வத்துடன், தமிழார்வமும் நிரம்பிய அவர் இந்நூலைப் படித்துப் பார்த்து வெளியிட இசைந்தார்கள். கூட்டிக் கழித்து, 'இழப்பா? இலாபமா?' என்று பார்த்து நூல்கள் வெளியிடும் பதிப்பாளர்களிடையே, கவிதை நூலை வெளியிட முன்வந்த அவரை என் வாழ்நாளில் மறக்கத்தான் முடியுமா?

'புதிய கவிதை மலர்கள் பூத்துக் குலுங்கட்டும்' என்று ஆர்வங்காட்டும் தமிழ்ப்பெருங்குடி மக்களின் திருக்கைகளில் இதைப்படைக்கிறேன்.

உள்ளே நுழையுங்கள்; உங்கள் உள்ளம் தரும் முடிவை எழுதுங்கள். வணக்கம்.

சென்னை
10.1.1963

தங்கள்,

**கா.வேழவேந்தன்.**

வழங்கியிருக்கிறார்கள். தமிழ்ச் சோலையிலே புதுச் செடி தழைக்கட்டும் என்று வாழ்த்தும் மழை உள்ளம் கொண்ட நாவலருக்கு எந்தச் சொற்களால் நான் நன்றி கூறப்போகிறேன்?

அதேபோல் என் நன்றிக்குரிய அரிய பெருந்தகையாளர் 'சாந்தி நூலக' முத்துராமன் அவர்கள் ஆவார். இயற்கையிலேயே தொழிலார்வத்துடன், தமிழார்வமும் நிரம்பிய அவர் இந்நூலைப் படித்துப் பார்த்து வெளியிட இசைந்தார்கள். கூட்டிக் கழித்து, 'இழப்பா? இலாபமா?' என்று பார்த்து நூல்கள் வெளியிடும் பதிப்பாளர்களிடையே, கவிதை நூலை வெளியிட முன்வந்த அவரை என் வாழ்நாளில் மறக்கத்தான் முடியுமா?

'புதிய கவிதை மலர்கள் பூத்துக் குலுங்கட்டும்' என்று ஆர்வங்காட்டும் தமிழ்ப்பெருங்குடி மக்களின் திருக்கைகளில் இதைப்படைக்கிறேன்.

உள்ளே நுழையுங்கள்; உங்கள் உள்ளம் தரும் முடிவை எழுதுங்கள். வணக்கம்.

சென்னை
10.1.1963

தங்கள்,

**கா.வேழவேந்தன்.**

# முதற் பதிப்பிற்கான பதிப்புரை

இந் நூலாசிரியர் கவிஞர் கா.வேழவேந்தன் அவர்களைப் பற்றித் தமிழ்ப் பெருமக்கள் பலர் நன்கறிவர். அவரது கவிதைகள் யாவும் சாதாரண தமிழ் மக்களும் எளிதில் படித்துணரும் தன்மையுடையதாக அமைந்திருத்தல் மிகவும் இன்றியமை யாததாகும். பொதுவாக, கவிதைகள் என்றாலே பலர் விரும்பிப் படிக்க மாட்டார்கள். ஏனெனில் கவிதைக்குப் பொருள் அறிந்து கொள்ளுதல் கொஞ்சம் கடினமாகும். அதேபோல் கவிதை எழுதுவதும் கொஞ்சம் கடினம்தான். எனவேதான் கவிதை எழுதுவோரும், அதை விரும்பிப்படிப்போரும் மிகச் சிலராக உள்ளனர். அத்தகைய சிரமத்தைப் போக்கி, எவரும் எளிதில் படித்துணரும் வகையில் கவிதை எழுத முடியும் என்ற நிலையை, இந்தக் கவிதை நூலின்மூலம் கவிஞர் தெளிவாக உணர்த்தி யுள்ளார் என்பதை நாங்கள் பெருமையுடன்கூறி, அதன் உண்மை யறிய எங்கள் கவிதை வெளியீட்டை தமிழ் மக்களுக்கு அளிக்கிறோம்.

தமிழ் மக்கள் பலரும் இக்கவிதை நூலைப்படித்துப் பயனடைவதோடு, இதுபோன்ற பல கவிதை நூல்களை எழுதுவதற்கும், வெளியிடுவதற்கும் ஆசிரியருக்கும் எங்களுக்கும் பேராதரவும் ஊக்கமும் அளிப்பார்கள் என நம்புகிறோம்.

சென்னை-1

15.1.1963. **சாந்தி நூலகத்தார்**

# இரண்டாம் பதிப்பிற்கான பதிப்புரை

நாடும் ஏடும் போற்றும் எழுச்சிக் கவிஞர் கா.வேழவேந்தன் அவர்கள் படைத்துள்ள இக்கவிதைத் தொகுப்பை இரண்டாம் பதிப்பாக வெளியிடுவதில் அல்லயன்ஸ் நிறுவனம் அகம் பூரிக்கின்றது. தமிழர் தலைவர் அண்ணா அவர்களாலும், இன்றைய தமிழகமுதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களாலும், இந்தத் தலைமுறையில் முன்னணியில் நிற்கும் தமிழ் நாட்டின் எல்லாச் சான்றோராலும் ஒருமுகமாக ஏற்றிப் போற்றப்படும் இவர் கவிதைகளே 'ஒரு தேனாறு' என்றால் தவறாகுமா?

எழுதப்படுவதெல்லாம் கவிதைகள் ஆகிவிடுமா? கவிஞர் வேழவேந்தன் தன் எண்ணத்தில் எழுந்த புதுமைக் கவிதைக் குழந்தைக்கு எடுப்பான சொல்லாடை அணிவித்து உவமையெனும் அணிபூட்டி, இலக்கிய வீதியிலே நடமாட விட்டிருக்கிறார்.

அடுத்தடுத்து இவர் நூல்களை வெளியிடப் போகும் நாங்கள் இந்தக் கவிதை நூலை அழகுடன் இரண்டாம் பதிப்பாகக் கொண்டு வருவதில் மிகுந்த மகிழ்ச்சியடைகிறோம்; ஆக்கிப் படைத்த கவிஞர் வேழவேந்தனுக்கு எங்கள் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

காலத்தால் அழியாத இந்தக் கவிதைச் சிற்பங்களைப் போற்றிப் பாராட்டிப் பாதுகாக்க, தமிழகம் முன்வரும் என்ற நம்பிக்கை எங்களிடம் என்றென்றும் உண்டு.

சென்னை-4 இங்ஙனம்,

18.5.72

**அல்லயன்ஸ் கம்பெனியார்**



# என்னுரை

பத்தாண்டுகளுக்கு முன்னால், தமிழகத்தின் சொத்தான பேரறிஞர் அண்ணா அவர்கள் வெளியிட்டு, போற்றிப் பாராட்டிய என் இந்த முதல் தொகுதி நூலை, மயிலை அல்லயன்ஸ் நிறுவனத்தார் இரண்டாம் பதிப்பாக அளிக்கிறார்கள்.

'தம்பி பெற்ற மழலையை அண்ணன் எடுத்து மடியிலே வைத்துக் கொண்டு அடுத்த வீட்டுக்காரரிடம் காட்டி மகிழ்வதைப்போல் நான் என் தம்பி வேழவேந்தனின் கவிதைகளை நாட்டுக்கு அறிமுகப்படுத்தி மகிழ்கிறேன்' என்று வெளியீட்டு விழாவில் அண்ணா அவர்கள் சுவைபடக் கூறினார்கள்.

காலம் மாறி வந்தாலும், இந்தக் கவிதைகளில் கேட்கப்படும் ஏராளமான என் சிந்தனை வினாக்களுக்கு இன்னமும் பதில் கிடைக்கவில்லை. ஆகவே இந்த இரண்டாம் பதிப்பு நூல் வண்ணத்தோடும் வனப்போடும் மீண்டும் வரவேண்டிய இன்றியமையாமை ஏற்பட்டுள்ளது.

'Poets are the unacknowledged legislators of the world'

என்று சொல்லப்பட்டாலும், உண்மையில் சட்டமன்றத்திலே இடம் பெற்றிருக்கின்ற நான், இந்தச் சமுதாய மாற்றக் கவிதை வரிகள் சட்ட வடிவங்களாக மாறும்போது பெறும் மகிழ்வைக் காட்டிலும் வாழ்க்கையில் அடையும் பூரிப்புண்டா?

எழில் கொஞ்சும் வகையில் பதிப்பித்து ஏற்றமுடன் இரண்டாம் பதிப்பாக வழங்கும் அல்லயன்ஸ் நிறுவனத்தாருக்கு என் நெஞ்சார்ந்த நன்றியைக் கூறி, பாட்டுலகைப் பாராட்டிப் போற்றும் தமிழ்ச் சமுதாயம் என்னை என்றும் போல் ஆதரிக்கவேண்டும் என்ற தாழ்மையான விழைவினை தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னை - 4 பணிவுள்ள,

18.5.1972 கா. வேழவேந்தன்

## மூன்றாம் பதிப்பிற்கான

# என்னுரை



கவிதை என்பதே 'கருத்துவிதை' என்ற சொல்லின் சுருக்கம் என்பேன்; அறிவுச் சோலை தழைத்திட, ஏட்டு வயலில் ஊன்றப்படும் வீரிய விதைகளே கவிதைகள்.

அந்த வகையில் தமிழ் மண்ணில் விதைக்கப்பட்ட திருக்குறள், நாலடியார் போன்ற பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும், பதினெண் மேல்கணக்கு நூல்களும், எட்டுத் தொகையும், பத்துப்பாட்டும், ஐம்பெரும் காப்பியங்களும், உலாக்களும், கோவைகளும், பரணிகளும், கலம்பகங்களும், அந்தாதிகளும், சதகங்களும், தூது நூல்களும் விளைவித்த அறுவடைகளே தமிழர் பண்பாட்டுக் குவியலாய் ஓங்கி உயர்ந்து இன்று, உலக மொழியறிஞர்களின் விழிப்புருவங்களை உயர்த்திக் கொண்டிருக்கின்றன.

'Best thoughts in best order is called the poetry' என்றான் ஆங்கில அறிஞன் காலரிட்ஜ்.

'கவிதை என்பதே பேசும் ஓவியம்; ஓவியம் என்பதே பேசாத கவிதை' என்றான் ஒரு கிரேக்க அறிஞன்.

அந்த வகையில் காலமெல்லாம் தமிழர் பண்பாட்டுப் பெருமைகளைப் பேசும் ஓவியங்களாய், ஆயிரமாயிரம் தமிழ்க் கவிதை இலக்கியங்கள் காலத்தை எதிர்த்து நீந்தி வந்து கருத்து மணம் வீசிக் கொண்டிருக்கின்றன.

'செய்யுள் செய்வதில் 'கிரேக்க மொழி'யினையும், இலக்கியப் பெருமையில் 'இலத்தீன் மொழி'யினையும் வென்று நிமிர்ந்து நிற்கும் ஒரே மொழி தமிழ் மொழிதான்!' என்கிறார் மொழியியல் அறிஞர் வின்ஸ்லோ.

மதத்தைப் பரப்பவந்த மேனாட்டறிஞர்கள் பலர், மதுத்தமிழின் கவிதை மயக்கத்தில் மூழ்கிவிட்டதால், வந்த

வேலையை மறந்துவிட்டு, வாழ்நாள் முழுதும் அந்த அமுதத் தமிழினைப் பரப்பும் அரிய பணிக்கே தம்மை ஒப்படைத்து விட்டனர். இதுதான் தமிழுக்குக் கிடைத்த வெற்றிகளில் தலை சிறந்தது என்பேன்.

**'கன்னற் பொருள்தரும் தமிழே!**
**நீ ஓர் பூக்காடு; நான் ஓர் தும்பி!'**

என்றார் பாவேந்தர்.

அந்தப் பூக்காட்டுள் நானும் ஒரு தும்பியாக நுழைந்தேன் என்னையும் ஓர் எளிய கவிஞனாகப் பதிவு செய்து கொண்டேன்.

**'எத்தனையோ இன்பம் இந்த நாட்டில் உண்டு;**
**அத்தனைக்கும் பேரின்பம் பாட்டில் உண்டு!'**

இது பாட்டுக்கோட்டை அமைத்த பட்டுக்கோட்டையின் அழுத்தமான கருத்து.

அந்தக் கவிதைப் பேரின்பத்தில் என்னை நான் கரைத்துக் கொண்டதால், படிக்கும் பருவத்தில் எழுந்த எண்ணக் கதிர்வீச்சுகளே இந்த முதல் தொகுதி.

**இந்தத் தொகுப்பு நூலைத்தான் இன்றைக்கு முப்பத்தைந்தாண்டுகளுக்கு முன்னர், 4.4.1963 அன்று சென்னை கோகலே மண்டபத்தில் பேரறிஞர் அண்ணா அவர்கள் வெளியிட்டு, ஒரு மணிநேரம் இந்தத் தமிழ்த் தொண்டனை உளமார வாழ்த்திப் பேசினார்கள்.**

**அந்த விழாவில் தான் அண்ணா சொன்னார்:**

''பாருங்கள். நான் கட்டுரைகள் எழுதுவேன்; கதைகள் வரைவேன்; நாடகங்கள் தீட்டுவேன். அவ்வளவாகக் கவிதைகள் எழுதுவதில்லை. சில குடும்பங்களில், முன்னால் திருமணம் நடந்த அண்ணனுக்குக் குழந்தை பிறந்திருக்காது; பின்னால் மணம் முடித்த தம்பிக்கு அழகான குழந்தை பிறந்துவிடும். ஆனால் அந்த அன்பு அண்ணன் தன்தம்பி பெற்ற மழலைக் குழந்தையைத் தோளில் தூக்கி வைத்துக் கொண்டு, அடுத்த வீட்டுக்காரனை அழைத்து, ''பாரப்பா! என் இளவல் பெற்ற அழகுச் சிலையை!'' என்று சொல்லிப் பூரிப்படைவதைப்

போல், **நான் என் அருமைத்தம்பி கவிஞர் கா.வேழவேந்தன் பெற்ற கவிதைக் குழந்தைகளை இன்று தமிழ் மக்களுக்கு அறிமுகப்படுத்திப் பெருமையுடன் பாராட்டி மகிழ்கின்றேன்.**

இதோ இந்த நூலின் பின்னட்டையில், அவர் கருப்பு அங்கி அணிந்து நீதிமன்றம் செல்லும் காட்சி எழிலுடன் அச்சிடப்பட்டு உள்ளது. இந்த வழக்கறிஞர் தன் வருமானத்தைப் பெருக்க நீதி மன்றத்தில் வாதாடுகின்றார்; அதே நேரம் தமிழர்தம் தன்மானத்தைப் பெருக்க, மக்கள் மன்றத்தில் வாதாடும் வகையில் இந்த உணர்ச்சி மிகு கவிதைகளை வடித்திருக்கின்றார். அவரை நெஞ்சாரப் போற்றி, இன்னும் பல நூறு கவிதைகள் படைத்திட உளமார வாழ்த்துகின்றேன்.

அந்த நாள் சங்ககாலக் கவிஞர்கள் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார், மருத்துவன் இளநாகனார், கொல்லன் வெண்ணாகனார் ஆகியோரைப் போல், இக்கால மருத் துவர்கள், பொறியாளர்கள், வணிகர்கள் என்ற பல தரப்பினரும் கவிதை எழுதித் தமிழன்னைக்கு அணி சேர்க்க வேண்டும் என்பதே என் பேரவா!''

**இப்படி இந்தச் சாமானியனைத் தட்டிக் கொடுத்து, ஊக்கப்படுத்தியது மட்டுமல்லாமல், தம் 'திராவிட நாடு' இதழில் தொடர்ந்து என் கவிதைகளை முகப்பில் வெளியிட்டு, என்னைத் தமிழக மக்களுக்கு வெளிச்சம் போட்டுக் காட்டிய மாத்தலைவர் அண்ணா அவர்களை, என் உடலின் கடைசி உயிரணு துடிக்கும் வரையில் மறக்க மாட்டேன்.**

அதே போல் இலக்கிய வேந்தர் தலைவர் கலைஞர் அவர்கள் தன் 'முரசொலி' 'முத்தாரம்' ஏடுகளில் என் கவிதைகளை எடுப்போடும், சிறப்போடும் வெளியிட்டு உற்சாக மூட்டினார்; அடுத்தடுத்து நான் எழுதிய 'வண்ணத்தோகை', 'ஏக்கங்களின் தாக்கங்கள்', 'தூறலும் சாரலும்' ஆகிய கவிதை நூல்களின் வெளியீட்டு விழாக்களில் பங்கேற்று வாழ்த்திப் பேருக்கம் அளித்தார்கள்.

அவர் என் நூல் வெளியீட்டு விழாவில், குறிப்பிட்டுப் பேசினார்:

**''தமிழ்மொழி, தமிழ் இன எதிரிகள் நம்மை அழிக்க முனையும்போது, அவர்கள் கொட்டமடக்கி, நாம் யார் என்று காட்ட சரியான ஆயுதங்களே கவிஞர் வேழவேந்தனின் கவிதைகள் எனும் அறிவாயுதங்கள். இவரை என் உடன் பிறப்புகளில் ஒருவர் என எண்ணும் போது, உவகை உதடுகளில் மட்டும் பூத்திடவில்லை; உள்ளத்திலும் கூடப் பூத்துக் குலுங்குகிறது!''**

**அந்தப் பெருமைக்குரிய தலைவர் கலைஞரை என் வாழ்நாளெல்லாம் நினைந்து, நினைந்து போற்றக் கடமைப் பட்டவன் நான்.**

பகுத்தறிவுப் பகலவன் தந்தை பெரியார் அவர்களின் பிறந்த நாள் விழாக் கவியரங்கில், உவமைக் கவிஞர் சுரதா போன்றவர்களுடன் நானும் பங்கேற்ற போது, **அய்யா அவர்களின் செவிகளில் என் கவிதை வரிகள் சரிவர விழாததால், அவர் என் கவிதைத் தாள்களை வாங்கி, தன் பூதக் கண்ணாடியால் படித்துப் பார்த்துத் தலையாட்டிக் கொண்டே பாராட்டியதை, மறக்க முடியாத பெரும் பேறாகக் கருதுகின்றேன்.**

அதேபோல் பாவேந்தர் பாரதிதாசன் அவர்களின் செம்மாந்த தலைமையில், 'சீன எதிர்ப்புக் கவியரங்க'த்தில் பங்கேற்றுப் பாடினேன். மாணவனான என் கவிதையைக் கூடியிருந்தவர்கள் உன்னிப்பாகக் கவனிக்காமல் பேசிக் கொண்டிருந்ததைக் கண்டித்த பாவேந்தர் அவர்கள், என்னை மீண்டும் அந்தப் பாடல் வரிகளைப் படிக்கக் கூறிப் பாராட்டி மகிழ்ந்தார்.

**'சூ'வென்றே விலங்குகளை விரட்டு வோம்நாம்!**
**'சூ'வருவான் என்பதற்கா இச்சொல் கண்டோம்?'**

என்ற அடிகளை நான் திரும்பப் படித்து, 'ஆடு மாடுகளை, 'சூ'வென்று கூறி விரட்டுவோம்; 'சூயென்லாய்' படையெடுத்து வருவான், அவனை ஓட ஓட விரட்டுவோம் என்பதற்காகவா முன்கூட்டியே இந்தச் சொல்லைக் கண்டு பிடித்தோம்?' என்று நான் விளக்கம் கூறிப் படித்தபோது, கூட்டத்தோடு சேர்ந்து **பாவேந்தர் கைத்தட்டி ஊக்கப் படுத்தியதுடன், தன் 'அழகின் சிரிப்பு' நூலில், 'கவிஞர் கா.வேழவேந்தன் பெற்ற**

**மதிப்பெண்கள் 55%' எனறு எழுதி வாழ்த்தியதை, இன்னமும் எனக்களிக்கப்பட்ட பெரும் பட்டயமாகப் பாதுகாத்து வருகின்றேன்.**

நான், **மொழிக்கடல் டாக்டர் மு.வ.** அவர்களிடம் பச்சையப்பன் கல்லூரியில் இலக்கியம் பயின்றபோது, நான் எழுதிய 'மழலைச்சிலை' எனும் கவிதையை வகுப்பறைக்கே எடுத்து வந்து, 'இதோ பாருங்கள். **என் மாணவர் கவிஞர் கா.வேழவேந்தன் தான் ஓர் அன்னையாகவே தன்னை உருமாற்றிக் கொண்டு எழுதிய அருமையான கவிதையைப் படிக்கின்றேன்!' என்று மாணவர்களிடம் படித்துக்காட்டி, என் முதுகில் தட்டிக் கொடுத்த காட்சியை நினைந்து மெய்சிலிர்த்துப் போகின்றேன்.**

அண்மையில் 'வேழவேந்தன் ஒரு பாட்டருவி' எனும் நூலை வெளியிட்ட **இனமானப் பெருந்தகை பேராசிரியர் அவர்கள்,** 'கவிஞர் வேழவேந்தனின் கவிதைகளை யாரேனும் பாவேந்தர் பாடல்களுடன் இடைச் செருகலாகச் சேர்த்துவிட்டு, இன்னும் ஐம்பது ஆண்டுகளுக்குப் பின்னர் அவற்றை யாரேனும் படித்து பார்த்தால், எது பாவேந்தரின் கவிதை, எது வேழவேந்தனின் கவிதை என்று பிரித்துச் சொல்ல மாட்டார்கள்; அந்த வகையில் **பாவேந்தரின் பாடல்களைப் போன்ற தரத்தோடும் திறத்தோடும் மிளிர்பவை வேழவேந்தனின் கவிதைகள்!'' என்று மனந்திறந்து பாராட்டியது நெஞ்சை நெகிழச் செய்த நிகழ்ச்சியாகும்.**

என் உளத்திற்கினிய கவிதை நண்பர்கள் அவ்வப்போது அளிக்கும் ஊக்க உரைகளே எனக்கு ஊட்டச் சத்தாக மாறித் தொடர்ந்து கவிதை படைக்கத் தூண்டுகின்றன.

'இலக்கிய வீதியில் எழுச்சி உலா நடத்தும் உங்கள் விருத்தப் பாக்கள், அரபு நாட்டுக் குதிரைகளைப் போல் கம்பீரமாக நடைபோடுகின்றன!'' என்று என்னை நாற்பது ஆண்டுகளாக, திங்கள்தோறும் மடல் எழுதி உத்வேக மூட்டும் என் உயிரனைய **கவிஞர் ஆரணி கா.மு.உமர் அவர்கள்,**

'உங்கள் பேனா ஒவ்வொரு முறை குனியும்போதும், மானுடம் உயர்ந்து நிற்கிறதே!' என்று சொல்லோவிய மடல்

தீட்டும் அற்புதச் சுவைஞர் **அரிமா தூத்துக்குடி எஸ்.எம்.ஹோஷ்மின் அவர்கள்,**

'உங்கள் கவிதைகள் எதிர்காலத் தலைமுறைக்கு, தமிழனின் வளர்ந்தோங்கிய வரலாற்றை நினைவூட்டும் சான்றா வணங்கள்!' என்று அன்றாடம் அன்பு நீர் பாய்ச்சும் **பகுத்தறிவுப் பாவலர் சேலம் எழுஞாயிறு அவர்கள்,**

'எங்கே, எங்கே என்று நான் தேடிப் படித்துச் சுவைக்கும் பொருளாழம் நிறைந்த பாடல்கள் உங்கள் கவிதைகள்; 'காலமெலாம் நீங்கள் பாடிக்கொண்டே இருக்க மாட்டீர்களா?' என்பதே என் கனவு!' என்று முடங்கல்கள் எழுதும் தலைமைத் தமிழாசிரியர் **புலவர் மணலி தங்க.சங்கரபாண்டியனார் அவர்கள்,**

'புதுக் கவிதைகளின் பொலிவான நுணுக்கங்களையும், பூரிக்கத் தகுந்த அழகுகளையும் தமக்குள் புதைத்து வைத்துக் கொண்டு, மரபுப் பூபாளமாய் மலர்ந்து மகிழ்விப்பதே தங்கள் அற்புதக் கவிதைகள்!' என்று தொடர்மடல் தீட்டும் என் **அன்பு இளவல் குடந்தை டி.எஸ்.பாலு அவர்கள்,**

'உங்கள் கவிதைகளை ஆழப்படித்து ஆய்வு செய்த காரணத்தால், உங்கள் பாட்டெனும் மயக்க மதுவிற்கு, ஒரு நிரந்தர அடிமையாகி விட்டேன் நான். இருபது வயதில் நீங்கள் எழுதிய கவிதைகளில் எப்படிப்பட்ட மிடுக்கும் துள்ளலும் மிளிர்ந்தனவோ. அப்படியே அறுபது வயதுக்குப் பின்னாலும் எழுத முடிகிறதே! அது எப்படி?' என்று கூறிப் பாசமுடன் நாளும் துணைபுரியும் **ஆய்வுச் செம்மல் மு.சனார்த்தனம் அவர்கள்,**

'ழ'கரம் தமிழுக்குச் சிறப்பூட்டுவது; 'ழ'கரத்தைப் பெயரில் கொண்டதாலேயே, நீங்கள் கவிஞரில் சிகரமாகத் திகழ்கிறீர்கள்!' என்று பரிவுமழைபொழியும் **கவிஞர் கடலூர் அ.தேவநாதன் அவர்கள்,**

'ஓயாமல் நீங்கள் கவிதை எழுதிக் கொண்டே இருக்க வேண்டும்; அருகிருந்து நான் பார்த்து மகிழ்ந்து கொண்டே இருக்க வேண்டும்! இதுதான் என் அவா!' என்று என்னைத்

தட்டிக் கொடுத்து வரும் **'குறட்செல்வர்' வி.த.கிருட்டிணமூர்த்தி அவர்கள்,**

என் கவிதைகள் வேண்டுமென்று விரும்பிக் கேட்டு, தமிழ்ப் பெருமக்களின் விழி வாசல்களுக்கு முன்னால் அன்றாடம் என்னை அழைத்துப் போய்க் காட்டிக் கொண்டிருக்கும் **'கவிக்கொண்டல்' மா.செங்குட்டுவனார், 'கவிதை உறவு' ஏர்வாடியார், 'அமுதசுரபி' விக்கிரமன், 'மூவேந்தர் முரசு' முத்து போன்ற ஏட்டாசிரியர்கள்,**

**ஆகிய கவிதை நெஞ்சங்களால் நாள்தோறும் வடித் தெடுக்கப்படுபவன் நான். அவர்களுக்கெல்லாம் என் வாழ்நாள் முழுதும் நான் கடன்பட்டிருக்கின்றேன்.**

இந்த நூலை எழிலுடன் அச்சிட்டு உதவிய **'ராஜ் எண்டர்பிரைசஸ்' திரு.ஆர்.இராசசேகரன் அவர்களுக்கு** என் தனி நன்றி உரித்தாகும்.

வாழ்க்கைப் பயணத்துடன் என் கவிதைப் பாதையிலும் உறுதுணையாக இருக்கும் **என் துணைவி,** இந்த நூலின் அட்டையை அழகுடன் வடிவமைத்த **என் இளைய மகன் டாக்டர் எழில்வேந்தன்** மற்றும் **என் இல்லத்தார்** அனைவரையும் பாராட்டி மகிழ்கின்றேன்.

இன்று உலக நாடுகளிலேயே நூற்றுக்கணக்கான கவிதை ஏடுகள் வெளிவரும் நாடு 'சப்பான்' என்கிறார்கள்; எங்கே மனவளம் ஓங்கி நிற்கிறதோ, அந்த மண்ணில்தான் பொருள்வளமும் உயர்ந்து நிற்கிறது.

எனவே, தமிழ் இளைஞர்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கின்றேன். ஏதேதோ கேளிக்கைகளில் உங்களைத் தொலைத்துக் கொள்வதைத் தவிர்த்து, தமிழ்க் கவிதைச் சோலையுள் நுழைந்து, உண்மையான மகிழ்ச்சியை அறுவடை செய்யுங்கள். அப்போதுதான் அறிவார்ந்த தமிழ்ச் சமுதாயத்தை நாம் உருவாக்க முடியும். வேறு என்ன வேண்டுவேன்?

சென்னை-4 | என்றும் தங்கள்

30.12.98

(கா. வேழவேந்தன்)



# இரவின் ஆட்சி

கொடுமைதரும் பரிதிக்குச் செலவு தந்து
குளிர்நிலவை அழைத்துவரும் இரவு வந்தால்
அடைகின்ற இன்பமென்னே? அடடா! எங்கும்
அழகரசி புன்னகைப்பாள்! நீல வான
மடுவினிலே பொன்மீன்கள் துள்ளும்! தங்க
வட்டநிலா முகிற்பாசிக் குள்ளே செல்லும்!
கடற்பெண்ணும் கதிரவனை விரட்டி வந்த
காதலனாம் நிலாதழுவத் தாவி நிற்பாள்!

ஊரெல்லாம் போயடங்கும்; பாடு பட்ட
உடலெல்லாம் படுக்கையிலே ஓய்வு காணும்!
நீரெடுத்த 'குளத்தல்லி' சிரித்தி ருக்கும்;
நீளிதழ் 'தாமரை'மூடி கற்பைக் காக்கும்!
சீரெடுத்த தமிழ்த்தென்றல் மலர்கள் தோறும்
தேடிமணம் கைக்கொண்டு வழிந டக்கும்!
ஓர்புறத்தில் நீரோடை சலச லக்கும்!
உறங்காத காதலர்க்கு விருந்தாய் ஆகும்!

பழுத்திருக்கும் மாங்கனிகள் நிலாவண் ணத்தால்
பைம்பொன்னின் கட்டிகளாய்த் தகத கக்கும்!
விழித்திருக்கும் வால்அணில்கள் கூடி வந்து
விரும்புகின்ற கனிதேடிச் சுவைக்கும்! தென்னை
ஒழித்துவிடும் கொடும்பேயாய்த் தலையை ஆட்டும்;
உறங்குகின்ற சிட்டுக்கோ ஊஞ்ச லாகும்!
விழுதுவிட்ட ஆலமரப் பொந்தின் ஆந்தை
வெற்றுக்குக் கூலியின்றிக் காவல் செய்யும்!

அலைகள்வந்து கடற்கரையின் உறக்கம் போக்கும்!
அச்சமின்றி நண்டுவந்து நடன மாடும்!
தலைகாட்ட விரும்பாத சில்வண் டெல்லாம்
தம்இசையைக் காற்றோடு கலக்கும்! சற்றுத்
தொலைவினிலே மரங்கொத்தி தாளம் போடும்!
தோகைமயில் கால்மாற்றி ஆடும்! காற்றோ
இலையுதிர்ந்த நெடுமூங்கில் துளையில் மோதி
எழிலுடனே இவற்றிற்கே ஒத்தே ஊதும்!

ஓர்புறத்தில் கருவண்டு மலரைக் கூடி
உறவாடிக் காதல்மொழி பேசும்! ஏரி
நீர்மட்டம் பொன்தகடாய் மின்னும்! வாழும்
நெடுமீன்கள் துள்ளிஉடற் பயிற்சி செய்யும்!
சீர்பெற்ற மாங்குயிலோ வாய்தி றந்து
தெம்பாங்கின் இசைமுழங்கும்! இவற்றைக் கண்டு
நேர்இல்லாக் கவிஞர்மனம் சிலிர்த்து நிற்கும்!
**நீள்இரவு நிலைக்கட்டும்; விடிய வேண்டாம்!**

**-சென்னை மாணவர் மன்றப் பரிசுக் கவிதை-**




இடிமுழங்க, வான்முகட்டில் பொத்தல் வீழ,
எழில்மின்னல் ஒளியேற்ற, கருவாய் வந்து
வடிவெடுத்தாய் மலையிடத்தில்! வெள்ள மேநீ!
வனம், சரிவு கடந்தெங்கே ஓடு கின்றாய்?
முடிவேந்தன் குட்டுவனின் படையைக் கூட
முந்திவிட்டாய்! தாழ்போடச் சக்தி யேது?
அடடாவோ! 'குறிஞ்சிக்கும் நெய்த லுக்கும்
அமைந்ததொரு தூதாம்நீ', கவிஞன் சொன்னான்!

வழியினிலே கண்டதெலாம் ஏன்கொ ணர்ந்தாய்?
மரங்கொடிகள், வைக்கோற்போர், குடிசை யாவும்
சுழிக்கரத்தால் சுருட்டிவந்தாய்! நுரையால் ஆன
சுடர்முடிதான் சீதனமோ? உன்னைக் காண
விழிஏங்கும் உழவரெலாம் 'பாரி' என்றார்!
விழவெடுத்தார்; இளங்சிறுவர் குதித்தார்; காந்தக்
கழிநீல விழிமாதர் பண்கள் பாடி
களித்திட்டார்! அப்பப்பா! வரவேற் பென்ன?

மலைத்தாயின் உடல்தோய்ந்து வந்த தாலே
வண்ணநிறச் சந்தனத்துக் குழம்பா னாயோ?
குலையோடு பகைமுடித்தே குருதி தோய
குதிபோட்டு வந்தாயோ? வந்த போது
தலைகுனிந்த நாணலினை மன்னித் தாயே!
தனக்கடங்கா மரங்களைஏன் முறித்திட் டாய்நீ?
வலைகளைஏன் கிழித்திட்டாய்? வயிற்றில் உள்ள
மடுமீனைக் காப்பதற்கோ? விளக்கம் தேவை.

காதலனைக் காண்பதற்கோ விரைந்தாய்? அந்தக்
கடற்கணவன் மார்பணைய என்ன ஆவல்?
ஓதையுடன் நடப்பதற்குக் கார ணம்ஏன்?
ஓங்காரக் குரலிட்டுச் செல்வ தென்ன?
'காதலுக்குத் தடைபோட்டார் எங்கே?' என்று
கடுங்குரலில் கேட்டாயோ? மகளே! உன்றன்
சீதவிழி தனைக்கண்டால் பயிர்சி ரிக்கும்!
செம்மாந்த நடைகண்டால் மனம்சி லிர்க்கும்!

**-மதுரை எழுத்தாளர் மன்றப் போட்டிப் பரிசுக் கவிதை-**




பிஞ்சாகத் தவழுகின்ற குழந்தை, 'அம்மா!
　　　　பிடித்துத்தா வான்நிலவை!' என்று கெஞ்சும்!
கொஞ்சுகின்ற அன்னையவள் கண்ணா டிக்குள்
　　　　குளிர்நிலவின் நிழல்காட்டி அமைதி செய்வாள்!
நெஞ்சினிக்கும் செய்தியடா! இன்று நம்மால்
　　　　நிலவுதனைப் பிடிப்பதற்கு முடியு மென்றார்!
பஞ்சனைய முகில்கடந்து வெளிக டந்து
　　　　பறக்கின்றான் நம்மனிதன்! வெற்றி, வெற்றி!

அண்டவெளிப் புத்துலகில் பாய்வ தற்கே
　　　　ஆசைமிக நமக்குண்டு; ஆனால் இங்கே
உண்டான சமுதாய நோய்க ளெல்லாம்
　　　　உடன்துணைக்கே அங்குவந்தால் ஏது நன்மை?
சண்டைவெறி, சாதிவெறி, கருமை வெண்மை
　　　　சதைநிறத்து வேற்றுமைகள், நிலம்பி டிக்க
செண்டைப்போல் தலையுருட்டும் வல்லா திக்கம்
　　　　சேர்ந்தங்கே துணைவந்தால் நிலவும் ஏன்?ஏன்?

வானகத்துக் காற்றுக்கே பங்கு போடும்
　　　　வல்லரசுக் கூட்டங்கள் மிகுந்த தின்று!
மீனுடனே சிரித்திருக்கும் நிலவு நேற்று
　　　　மென்னெஞ்சக் கவிஞருக்கே சொந்தச் சொத்து!
ஊனமின்று வந்ததடா! தாவிச் சென்று
　　　　ஒருநாட்டான் கொடிபோட முயலு கின்றான்.
ஏனந்தப் புத்துலகம்? யார்க்கு வேண்டும்?
　　　　இருக்கின்ற வெறியெல்லாம் அங்கும் வந்தால்!

விளைகின்ற தானியங்கள் எஞ்சி விட்டால்
மிஞ்சியதைப் பசித்தவர்க்கே அளித்தி டாமல்
சுளையாகக் கடலினிலே எறியும் பாழும்
சுயநலத்துக் கும்பலங்கே தொடர்ந்தால், தீய
களைநிறைந்த வயலாகும் நிலவும்! அங்கே
காலெடுத்து வைப்பவர்கள், 'ஓரி னத்துக்
கிளைஞர்க'ளாய்ப் 'பொதுக்கொடி'க்கீழ் ஒன்று சேர்ந்து
கெழுமியதோர் **'புத்தாட்சி'** காண வேண்டும்!



# காவிரி

புகழ்பூத்த காவிரியே! தமிழர் மண்ணைப்
பொன்னாக்க வந்தவளே! எங்கள் மூச்சாய்த்
திகழ்கின்ற கண்கண்ட அமுதே! நின்ற
சீரெல்லாம் பெற்றவளே! உன்னை நாவாற்
புகழ்வதெனில் மொழிஎங்கே? சொற்கள் எங்கே?
பூவுலகில் உனக்குநிகர் நதிதான் எங்கே?
பகலளிக்கும் பரிதியின்முன் விண்மீன் எங்கே?
பகீரதனின் கங்கையெலாம் உன்முன் எங்கே?

உள்ளபல ஆறெல்லாம் உன்னைப் போன்றே
ஒப்பற்ற தனிப்பெருமை கண்ட துண்டா?
துள்ளிவழி நடந்திடுவாய்! ஆனால் சீறித்
துன்பத்தை என்றேனும் இழைத்த துண்டா?
வெள்ளைவண்ணப் பனிப்பாறை யாக மாறி
வேதனையைத் தந்ததுண்டா? மற்றும் எங்கோ
கள்ளமிலாப் பண்போடு குடகில் தோன்றிக்
காப்பதற்கே தமிழ்நாட்டிற் புகுந்தாய், வாழி!

'தண்ணீரும் காவிரியே' என்றே அந்நாள்
தமிழ்க்கம்பன் உனைத்தானே பாடிச் சென்றான்.
வெண்ணிப்போர்க் களங்கண்ட கரிகாற் சோழன்
வேண்டிவந்து உனைத்தானே போற்றி நின்றான்
கண்ணகியின் கோவலனும் உன்னைத் தானே
'கானல்வரி' தனில்வைத்துப் பாடிப் போனான்!
எண்களிலை என்றாலே கணக்கோ இல்லை;
எழில்மகளே! நீஇலையேல் தமிழ்நா டேது?

அன்றிருந்த 'குமரிக்கோ' டில்லை! சொல்லால்
அணிபெற்ற 'பஃறுளி'யும் இல்லை! நின்று
தொன்றுதொட்டு விளங்கிய 'பூம் புகா'ரும் இல்லை!
சுவடில்லை! காணவில்லை! ஆனால் நீயோ
இன்றைக்கும் எமைக்காத்து வாழு கின்றாய்!
ஈடில்லாப் பெருமையெலாம் சேர்த்தாய்! தெற்கைப்
பொன்கொழிக்கச் செய்திட்டாய்! எனவே ஏட்டால்
'பொன்னி'எனச் சீராட்டப் பெற்றாய்! வாழி!

ஓடுகின்ற உன்னுருவில் கோணல் கண்டேன்!
உள்ளத்தில் சிறுகோணல் கண்டே னில்லை!
மேடுஉண்டு, பள்ளமுண்டே உன்னி டத்தில்
மென்னெஞ்சில் குற்றமொன்றும் அறிந்தே னில்லை!
நாடிவரும் உழவர்மனம் மகிழச் செய்யும்
நானிலத்துப் புதுவள்ளல் ஆனாய்! செந்நெற்
காடெல்லாம் வளங்கொழிக்க வைத்தாய்! எங்கள்
காவிரியே! புகழ்விரித்த தாயே! வாழி!




நீள்கடலே! பெருங்கடலே! தமிழன் வாழ்வில்
நீங்காத குற்றம்ஏன் இழைத்தாய்? உன்றன்
தோள்மீது ஏறியன்று கடந்தார் என்ற
சொல்லுக்கோ பழிவாங்கிக் கொண்டாய்? அன்றே
வாள்கொண்டு போர்கண்ட அன்னோன் வாழ்வின்
வரலாற்றுக் காட்சிகளை, நூல்கள் தம்மை
கோள்கொண்டு அழித்தாயே! அவனை என்றும்
குனிந்துஎழாப் புழுவாக்க வழிஏன் கண்டாய்?

'யாழ்'அழித்தாய்! 'குழல்'அழித்தாய்! சிற்பம் போன்ற
'அருங்கலைகள்' எத்தனையோ அழித்தாய்! சான்றோர்
சூழ்ந்துநின்ற 'முதற்சங்கம்' அழித்தாய்! எங்கள்
'தொன்மதுரை', 'கபாடபுரம்' அழித்தாய்! தங்கள்
வாழ்நாளில் உனைக்காணா மரபோர் எல்லாம்
வந்துஎம்மை ஆள்வதற்குத் துணைநீ செய்தாய்!
பாழ்,பாழ்,பாழ் எல்லாமே! தமிழன் என்றும்
பரதேசி யாய்அலைய வழிஏன் கண்டாய்?

பகைக்கடலே! உன்பசிக்கே இரையாய் எங்கள்
பாட்டன்மார் வளர்த்திட்ட கலைகண் டாயோ?
நகைசெய்தே அணிந்துகொள்ள ஆணி முத்தை
நல்குகின்றாய் என்கின்றார்! மான மென்னும்
நகைதன்னைக் கொள்ளைகொண்ட பிறகேன், கீழோர்
நகைக்கின்ற நிலைவந்த பிறகேன், நீயும்
வகைகாட்ட வருகின்றாய்? தமிழன் இன்று
வக்கற்றுப் போனதற்கு வழிஏன் கண்டாய்?

குமரிக்கோ' டழித்திட்டாய்! தமிழர் வெற்றி
கூறிவந்த 'பஃறுளி'யை மறைத்தாய்! நாங்கள்
எமதென்று மார்தட்டிச் சொல்லத் தக்க
இலக்கியங்கள் எத்தனையோ ஒழித்தாய்! அன்று
சுமைசுமந்த கலங்களெல்லாம் சூழ்ந்த 'தொண்டி'
துறைகளையும் சுவட்டினையும் சுருட்டிக் கொண்டாய்!
சமர்கண்ட தமிழனின்று கோழை யாகிச்
சரித்திரத்தை மறப்பதற்கு வழிஏன் கண்டாய்?

எல்லையிலாப் பசியோடு தமிழன் வாழ்ந்த
'இலெமூரியாக் கண்ட'த்தை விழுங்கிக் கொண்டாய்!
செல்லரித்த படமாக்கி, கண்ணி னின்று
சிந்துகின்ற துளிபோலே 'ஈழ நாட்'டைப்
பொல்லாத கடலே! ஏன் பிரித்துப் போட்டாய்?
போர்ச்சேற்றால் அம்மண்ணோ சிவந்த தின்று!
எல்லோர்க்கும் **'தனிநாடு'** இருக்கும் போது,
என்தமிழன் விழிஏங்க வழிஏன் கண்டாய்?



# படைப்பின் குறும்பு

தெறித்ததாம் ஓர்அணு, செந்தழற் கதிரில்!
உறித்தஆ ரஞ்சுபோல் உலகம் முகிழ்த்தது.
மெல்லக் குளிர்ந்தது; மேகம், உயர்மலை,
சொல்லொணா ஆழப் பொல்லாக் கடல்கள்
தோன்றின; கடலின் தூய முகில்கள்
வான்மண் டலத்தில் வடித்தன விழிநீர்;
அருவிகள் மலைக்கே ஆடை யாயின!
உருவம் எடுத்தன ஓடையும் ஆறும்.
எங்கும் பசுமை; எழில்,எழில் எங்கும்!
கொங்கும் பலாவும் குலைநிறை தென்னையும்
உலகை அழகின் ஓவிய மாக்கின!
வலம்வரும் தென்றல் உலகில் பிறந்தது;
மலர்கள் அவிழ்ந்தன; மயக்கும் தென்றல்
உலவிடும் போது உயர்மலர் மணத்தைத்
தாங்கிச் சென்றது, தாரணி எங்கும்!
ஓங்குநீர்க் கடலில் உயிர்மீன் தோன்றின;
ஆங்கவை துள்ளி ஆடின; பாடின!
ஊர்பவை, பறப்பவை, உலகில் பிறந்தன.
கார்கண் டோர்புறம் கான்மயில் ஆட
தேன்குரற் குயிலோ தெம்பாங் கிசைத்தது.
மானும் முயலும் மகிழ்ந்தன கண்டே,
வகைவகை யான மணிப்புறா, சிட்டு
புகைமுகில் வானில் பொலிவுடன் பறந்தன.
தாமே வளர்ந்தன தானியக் கதிர்கள்;
ஆம்,ஆம் கிளிகள் ஆங்கே கூடின.
அடுத்துப் பிறஉயிர் அடுக்காய்த் தோன்றின.
வெடுக்கெனத் தாவும் நெடுவால் குரங்கு
பிறந்தது; அதன்வழிப் பிறந்தான் மனிதன்;
இறந்தது உலகின் **அமைதி!**
படைப்புப் பெண்ணாள் பார்த்தே சிரித்தாள்.




தொட்டிலிலே அரும்பாகக் கிடந்த நேரம்
தூங்க அன்னை 'ஆராரோ' இசைத்த தின்பம்!
சிட்டைப்போல் கிளையினின்று மடுவில் தாவி
சிறுவயதில் நீந்தியதும் இன்பம்! தேக்குக்
கட்டிலிலே பருவத்தில் மங்கை தந்த
கன்னலினைப் பருகியதும் இன்பம்! பின்னர்
கட்டவிழந்த நரைவயதில் திண்ணை மீது
கதைபேசல் தனிஇன்பம்! இதுதான் வாழ்க்கை!

சோற்றினில்தான் இன்பம்என்றோன் 'மண்ணின் மீது
சுமை'என்ற பட்டத்தைப் பெற்றான்! இரத்தச்
சேற்றினிலே பகைமுடித்தல் இன்பம் என்றோன்
'சேர'னைப்போல் பெரும்புகழைப் பெற்றான்! குன்றின்
ஊற்றைப்போல் எழுத்தினிலே இன்பங் கண்டோன்
ஒப்பற்ற 'இளங்கோ'போல் ஆனான்! அன்புக்
கூற்றாலே வையகத்தில் இன்பங் கண்டோன்
குணக்குன்று 'புத்த'னைப்போல் போற்றப் பெற்றான்!

மொழிவாழ, இனம்வாழ, நாடு வாழ
மூச்சுவிட்டோர் 'நடுகல்'லே இன்பச் சின்னம்!
விழிஇமைத்தல் காணாமல் பகைவன் விட்ட
வேல்வாங்கிப் பெற்றபுண்ணே இன்பச் சின்னம்!
'பழிசெய்தேன்' எனப்பதறி வெட்டிக் கொண்ட
பாண்டியனின் பொற்கைதான் இன்பச் சின்னம்!
அழியாத தமிழுக்கே அழிந்தான் என்ற
அரசன்'நந்தி வரலா'றே இன்பச் சின்னம்!

நீலவண்ண வான்குளத்தில் துள்ளும் மீன்கள்

நெஞ்சினிக்கும் பேரின்பம் கவிஞ னுக்கு!

வாலிளமைக் குமரியவள் தைத்த பார்வை

மயக்குகின்ற சுவைஇன்பம் இளைஞ னுக்கு!

சூலவிழ்ந்த நெற்கதிர்கள் தலைய சைத்தல்

சொக்கவைக்கும் பேரின்பம் உழவ னுக்கு!

கோலஎழிற் சிலைதன்னைப் புகழ்ந்து மாற்றார்

கூறும்சொல் சிற்பிக்கே இன்பம் அன்றோ?

கூகைக்கோ 'கும்மிருட்'டே இன்பம்! அஃதைக்

கொத்துகின்ற காக்கைக்கோ 'பகல்'தான் இன்பம்!

ஈகைகொன்ற திருடருக்கோ 'கள'வே இன்பம்!

எடுத்தளிக்கும் வள்ளலுக்கோ 'அற'மே இன்பம்!

தோகைமயில் நடனமிடக் 'கார்'தான் இன்பம்!

சோலையில்வாழ் மாங்குயிற்கு 'வேனில்' இன்பம்!

**ஆகையினால் ஒன்றுக்கோ ஒன்றில் இன்பம்!**

**அடுத்தவர்க்கோ அதுதுன்பம்; விந்தைச் சட்டம்!**

சேற்றிலுள்ள தவளையதன் 'புலம்ப' லில்தான்

சீறிவரும் பாம்புக்கே இன்பம்! வானக்

காற்றுதவழ் மணிப்புறாக் 'குருதி' யில்தான்

கழுகுக்கு நல்லின்பம்! அதுபோல் துள்ளி

ஆற்றோடும் சிறுகெண்டை 'அழுகை' யில்தான்

ஆவென்று வாய்திறக்கும் வாளைக் கின்பம்!

மாற்றாரின் 'விழிநீ'ரில் இன்பங் காட்டும்

மாக்கொடிய விதிமுறைகள் படைத்தோன் எங்கே?

துப்பாக்கிச் சத்தத்தில் இன்பங் கண்ட
சுயவெறியன் 'இட்ல'ரினை உலகம் தூற்றும்!
'எப்போதும் மறுகன்னம் காட்டல் இன்பம்'
எனச்சொன்ன 'ஏசு'வினை உலகம் போற்றும்!
செப்பாலே உருவான காசை எண்ணிச்
சேமித்தல் இன்பமென்றோன் மண்ணாய்ப் போனான்!
'இப்புலவன் வறுமைக்குத் தலையைத் தந்தேன்'
எனச்சொன்ன 'குமணவள்ளல்' நெஞ்சில் நின்றான்!

புழுவுக்குச் சாய்க்கடைதான் இன்பம்! வீழ்ந்தே
புரளுகின்ற பன்றிக்குச் சேறு இன்பம்!
அழுகிவிட்ட தசையொன்றே ஓநாய்க் கின்பம்!
அடுத்தவரின் ஓலந்தான் தீயோர்க் கின்பம்!
வழுவறியாச் சிறுவயதில் தும்பி வாலில்
வதைக்கின்ற முள்குத்திக் காணல் இன்பம்!
செழுமையுற்ற அறிவாளன் அவனே யானால்
'திருக்குறளின் அறப்பா'லில் இன்பங் காண்பான்!

மலைப்பெண்ணாள் முத்தாரம் அருவி; அந்த
மங்கைநல்லாள் எடுத்தணிந்த பசும்பூ வாடை;
தலையிடிக்கும் கனிந்தபலா; அதைப்ப றித்துத்
'தம்த'மென்று முரசொலிக்கும் மந்திக் கூட்டம்;
கலைமானின் குதிப்பாய்ச்சல்; கரிய பாறை
கைகால்கள் முளைத்ததுபோல் பிளிறும் யானை;
வலைவீழா செம்போத்தென் றிவைக ளெல்லாம்
வளமார்ந்த கற்பனைக்கே இன்பக் காட்சி!

'எனைஉனக்குத் தந்துவிட்டேன்; உன்னை நீயும்
எனக்கேநீ தா'வென்று வணிகம் பேசி,
பனைத்தோப்பில், மாங்காட்டில் அவளைக் கண்டு
பழச்சாற்றைப் பகிர்ந்துண்ட பின்னர் தூய
வினைமணத்தை முறையோடு முடித்துக் காட்டி,
விண்மதியும் குளிரும்போல் இணைந்து கொஞ்சித்
தினைக்காட்டுக் கிள்ளைகளாய்ச் சிரித்து வாழ்தல்
சீரார்ந்த இல்லறத்தின் இன்பக் காட்சி!

ஓயாத வறுமைப்பேய் தழுவி நிற்க,
ஒருபருக்கைச் சோற்றுக்குத் தெருவில் ஓடும்
நாயோடு போராடி, நலிந்து, தேய்ந்து,
நரம்புதசை இவைமறைந்தே எலும்பாய் ஆகி,
சாயாத உடல்சாய்ந்தும் உயிர்போ காமல்
தத்தளிக்கும் பிறவிக்குக் 'கயி'றே என்றும்
ஓயாத அமைதியின்பம் அளிக்கும்; பாவம்!
உயிர்மாய்த்தல் அவனுக்கோ இன்பக் காட்சி!

காக்கைக்கு வேம்புதரும் கனிதான் இன்பம்!
காமுகர்க்கு வேசையரின் உடல்தான் இன்பம்!
தீக்குணத்துத் தேளுக்குக் கொட்டல் இன்பம்;
தினவெடுத்த வல்லரசுக்(கு) அணுகுண் டின்பம்!
சாக்குருவிக் கடுத்தவரின் இறப்பில் இன்பம்!
தணலுக்குக் கரியாக்கிக் காணல் இன்பம்!
ஆக்குதலில் சிலபேர்க்கோ இன்ப மில்லை;
அழித்தலில்தான் பேரின்பம்! சீச்சீ, வெட்கம்!

'கொடைமட'ந்தான் இன்பமென்றான், பாரி! அந்தக்
கோமகனைப் பாடாத செந்நா இல்லை!
'படைமடம்'ப டாதிருத்தல் இன்ப மென்ற
பார்வேந்தன் இரும்பொறையும் புகழப் பெற்றான்!
நடைமாத ரேஇன்பம் என்று சொல்லி
நலிவடைந்த சச்சந்தன் இகழப் பெற்றான்!
கடைநிலையில் வாடிநின்றோர் பசியைப் போக்கி,
கன்னிமணி மேகலையும் இன்பங் கண்டாள்!

அவலத்தை அடைந்தாலும் கண்ணீர்! மிக்க
அகமகிழ்ந்து சிரித்தாலும் கண்ணீர்! நுட்பத்
திவலைகளாய் நீர்க்காற்றில் மிதத்தல் போலே
தேக்கிஉடல் கண்ணீரை வைத்தி ருக்கும்!
கவலையற்ற சிரிப்பாலே அதுதோன் றட்டும்!
கதிகலங்கி அழுவதனால் கண்ணீர் வேண்டாம்!
குவலயத்தின் புறவெளியில் ஒன்று மில்லை;
குடிகொண்ட நெஞ்சில்தான் இன்பம் உண்டு!

கயிற்றினையே பாம்பென்போன் கோழை; அந்தக்
கடைமடையன் இன்பத்தைக் கண்ட துண்டா?
எயிற்பாம்பைக் கயிறென்போன் வீரன்! அன்னோன்
இவ்வுலகில் அச்சமின்றி இன்பங் கண்டான்!
பயிர்செழிக்க உரம்வேண்டும்; அதுபோல் இன்பப்
பழம்சுவைக்க உள்ளத்தில் உரந்தான் வேண்டும்.
'உயிர்இன்றே பிரியட்டும் மகிழ்ச்சி!' என்ற
உறுதியுடன் வாழ்வதுதான் இன்பம், இன்பம்!

**-காரைக்குடி அழகப்பா கல்லூரிப் போட்டிப்
பரிசுக் கவிதை-**



# மழலைச் சிலை

**பால்நிலவைக்** கிள்ளிவந்து 'நெற்றி' யாக்கிப்
படுவானின் குழம்பெடுத்துக் 'கன்ன' மாக்கித்
தோல்அவிழ்ந்த மாங்கனியால் 'இத'ழை யாக்கித்
தும்பிதந்த தந்தத்தால் 'கழுத்'தை யாக்கிச்
சேல்விழியைப் பெயர்த்துவந்து 'கண்க' ளாக்கிச்
செம்பொன்னின் வார்ப்படத்தால் 'உட'லை யாக்கி
ஆல்போன்ற என்வயிற்றில் உன்னை வைத்தோன்
'யார்மகனே? யார்மகனே?' தேடு கின்றேன்

ஏதேதோ பட்டங்கள் உண்டாம்; எல்லாம்
எம்மூலை? நீயளித்தாய் 'அன்னை'ப் பட்டம்!
போதைதரும் செவ்வுதட்டில் மதுவை வைத்தாய்!
பொலிவுதவழ் உன்குரலில் குழலை வைத்தாய்!
சீதவிழிக் கதவில்என் உயிரோ வைத்தாய்?
சிற்றெறும்பு தொட்டாலும் துடிக்கின் றேனே!
பாதத்தால் நீஉதைத்தால் போதும், செல்வா!
பாவைஎன்றன் உடலணுக்கள் சிலிர்த்து நிற்கும்!

'கிம்பர்லி' வைரத்தைப் பரப்பி வைத்து,
கீழ்க்'கொற்கை' முத்தாலே சுவரெ ழுப்பி,
செம்பவளக் குவியலினால் கூரை யிட்ட
திறந்ததொரு அரண்மனைக்குள் போவென் றாலும்
தெம்பாங்குப் பண்ணே!உன் அணைப்பை யன்றி
'சீச்சீச்சீ, தேவையில்லை' என்றே சொல்வேன்!
செம்பனைய மார்பகத்துக் கலசத் தேஉன்
சீரிதழ்கள் பதிந்துவிட்டால், சொர்க்கம் காண்பேன்.

சிரிக்கின்ற மலர்மட்டும் அழகாய்த் தோன்றும்;
சித்திரையின் முழுநிலவே எழிலாய்த் தோன்றும்;
எரிக்காத பிழம்பே!நீ அழுத போதும்
இமைமூடித் தூங்கையிலும் அழகைக் கண்டேன்!
அரிமாவே! உன்பிஞ்சுத் தோளணைத்தே
அயர்ந்துவிட்டால் புதுக்கனவில் மிதப்பேன்; ஏனோ
புரிவதில்லை! உன்கன்னம் தின்ற பின்னர்
புளிக்குதடா, கற்கண்டும்! பொய்யா சொன்னேன்?

எண்ணத்தின் தேரோட்டி நீயோ? அன்றி
இல்லறத்துக் காவியமே நீயோ? உள்ள
மண்ணகத்துச் சிற்பியெலாம் கூடி வந்து
வடித்ததொரு பொற்சிலைதான் நீயோ? எங்கோ
கண்காணா நெடுந்தூரத் தீவ கத்தில்
கண்மணியே, நமைக்கொண்டு விட்ட போதும்
**உண்பதுவும் உறங்குவதும் வேண்டேன், வேண்டேன்;**
**உயிர்ச்சிலையே! நீயிருந்தால் போதும், போதும்!**



# கவிதை

பூச்சிரிப்பால் குழிஇழையும் குழவிக் கன்னம்
பூரிக்கும் அன்னைக்குக் கவிதை! வானில்
நீச்சலிடும் நிலவோட்டம் கலைஞ னுக்கு
நெஞ்சினிக்கும் உயிர்க்கவிதை! காவ ரங்கில்
கூச்சலிடும் சில்வண்டின் இனிய ஓசை
கொஞ்சுதமிழ்ப் பாவலர்க்குக் கவிதை! நாவின்
பேச்சின்றி ஆணழகன் பதித்த பார்வை
பெண்ணெஞ்சைச் சிலிர்க்கவைக்கும் கவிதை என்பேன்!

உதிர்ந்துவிழும் இலைச்சருகு நாளை வாழ்வை
உணர்த்துகின்ற நுண்கவிதை! மறவன் போரில்
எதிர்சென்றே ஏற்றவிழுப் புண்கள் எல்லாம்
எந்நாளும் புகழ்பாடும் கவிதை! வெள்ளிக்
கதிர்வீச்சில் மழைத்திவலை வரைந்து காட்டும்
கவர்ச்சிமிகு வானவில்லோர் கவிதை! பூவில்
சதிராடி உடல்தழுவும் குறும்புத் தென்றல்
தாரத்தின் சக்களத்திக் கவிதை என்பேன்!

சோற்றுக்கே அலைந்தழிந்தோன் இறுதி ஓலம்
சுடுகின்ற சமுதாயக் கவிதை! மார்பில்
ஆற்றைப்போல் வழிந்தோடும் வியர்வை நீரே
அழியாத உழைப்பெழுதும் கவிதை! குன்றில்
ஊற்றெடுத்தே ஆர்த்துவிழும் அருவிக் காட்சி
ஒயில்வண்ண இயற்கைசொலும் கவிதை! தாழ்ந்த
சேற்றினிலே தாமரைகள் சிரிக்கும் மாட்சி
சிந்தனைக்குப் படைப்புதரும் கவிதை என்பேன்!

மொழிப்போரில் உயிர்தந்தோர் நடுகல் இன்னும்
முடிக்காத தொடர்கவிதை! மலர்ச்சோ லைக்குள்
எழில்சிறகுத் தும்பியெலாம் எழுப்பும் பாடல்
ஏட்டினிலே அள்ளாத கவிதை! காட்டில்
விழிக்காத பிணங்கொத்தும் கழுகின் கூச்சல்
வெறியர்க்கே அறிவூட்டும் கவிதை! வெள்ளம்
சுழித்தோடும் நீர்க்குமிழி காலக் கூற்றைச்
சொல்லாமல் சொல்லிவரும் கவிதை என்பேன்!

மணநாளில் கழுத்தேறும் மாலை, வாழ்வின்
மறைவிளக்கும் புதுக்கவிதை! நித்தம் ஓடிப்
பணம்சேர்க்கும் கருமியின்கை இரும்புச் சாவி
பரிதாபக் கதைபேசும் கவிதை! மண்ணில்
அணங்குகளின் விழியூறும் கண்ணீர், நூறாய்
ஆயிரமாய்ப் பொருள்கூறும் கவிதை! இங்ஙன்
கணக்கிட்டால் உலகத்தின் அணுக்கள் யாவும்
கவிதைகளின் தேக்கமடா! மறுப்பார் எங்கே?



# மாணவர்க்குத் தேர்வு தேவையா?

விளையாட்டுப் பிள்ளைகளின் கால்க ளுக்கு
        விலங்காகி அறையினிலே பூட்டும்; என்றும்
வளையாத உடலையெலாம் வளைக்கும்; நல்ல
        வளமான உறக்கத்தைப் பாழ்ப டுத்தும்.
அளியில்லா ஆசிரியர் மாண வர்க்காய்
        ஆய்ந்தெடுத்தத் தண்டனையே தேர்வு; தோற்றால்
விளைவுபல தோற்றுவிக்கும் வீட்டில்; நெஞ்சில்
        வேதனையைத் தோற்றுவிக்கும்! என்ன தேர்வு?

நீர்சூழ்ந்த கடலாழம் காண, நிற்கும்
        நெடுமலையின் உயரத்தைக் காண, இங்கே
சீரோடு கருவிபல உண்டு; ஆனால்
        சிறப்பார்ந்த நீள்வானம் அளந்து சொல்ல
யார்உண்டு? மாணவரின் மூளைத் திண்மை
        அறிவதற்கும் கருவியுண்டோ? இல்லை யென்றால்
தேர்வொன்றே அறிவாற்றல் அளந்து கூறும்
        திறஞ்செறிந்த சாதனமாம்! யார்தான் ஏற்பார்?

நடைமுறையில் இருக்கின்ற 'தேர்வு'ம் நீரில்
        நலனின்றி மிதக்கின்ற 'நுரை'யும் ஒன்றே!
சடைப்பின்னல் மாணவியர் சமையல் நூலில்
        சரிநூறு மதிப்பெண்கள் பெறுவ தாலே
தடையின்றிச் சுவையுணவு சமைப்பார் என்றே
        சாற்றிடுவார் யாரிங்கே? வெள்ளைத் தாளில்
விடையெழுதி வெற்றிபெறல் வேறு; வாழ்வில்
        வெற்றியுறல் அதுவேறு; மறுப்போர் உண்டா?

தேர்வுதனில் வென்றவரே அறிஞர்; மற்றோர்
திறனில்லா மக்களென்று சொல்ல லாமா?
பார்போற்றும் விஞ்ஞானி 'எடிசன்' தேர்வில்
பலதடவை தோற்றாராம்! எண்க ணக்கில்
ஆர்வமுள்ள 'இராமாநு ச'னுமிந் நாட்டில்
அருங்கணிதத் தேர்வினிலே தோற்றா ராமே!
யார்சொல்வார் மூடரென்றே இவரை யெல்லாம்
ஆதலினால் ஏன்தேர்வாம்? எதற்குத் தேர்வாம்?

அணிகலந்தான் கன்னியர்க்குக் கற்பே; ஆனால்
அக்கற்பைச் சோதித்தல் அழகே இல்லை!
மணிமகுடம் மாணவர்க்கே அறிவு; அந்த
மாண்புநிறை நல்லறிவைத் தேர்வைக் கொண்டு
கணிப்பதிலே நியாயமிலை; நேர்மை யில்லை.
கற்றதெலாம் பேனாவின் முனையில் வைக்கும்
பணிதனிலே எத்தனைபேர் வல்லார்? இந்தப்
பரீட்சைஒரு 'சீட்டாட்டம்'; வேறொன் றில்லை!

பொதுமறையாம் 'திருக்குற'ளை எழுத அன்றுப்
புலமைபெற வள்ளுவன்தேர் வெழுதி னானா?
மதுத்தமிழால் 'சிலம்'பிசைக்க இளங்கோ நல்ல
மதிப்பெண்கள் பெற்றானோ தேர்வில்? இந்தச்
சதித்தேர்வு மாணவரின் நெஞ்சந் தன்னில்
சச்சரவைப் பொறாமைதனை மூட்டும்; மற்றும்
இதுவுண்மை; தோற்றுவிட்டால் அன்னோர் சென்று
இன்னுயிரை முடித்திடவும் வழிய மைக்கும்!

இலக்கியங்கள்; வரலாற்று நூல்கள்; நல்ல
இன்பமுடை அகப்பொருள்நூல்; சட்ட மெல்லாம்
பலப்பலவாய் மகிழ்ந்துபடித் தறிவ தாலே
பல்கலைக்க ழகமென்று சொன்னார்; நல்லோர்
கலந்திங்கே கருத்துரைகள் பெறுவ தாலே
கல்லூரி எனச்சொன்னார்! கருப்பு மையால்
வலமிடமாய்க் காகிதத்தில் கிறுக்கும் தேர்வு
வந்திங்கே வாட்டுவதேன்? முறையே இல்லை!

உள்ளத்தை நடுங்கவைக்கும்; எலும்பை மெய்யை
உருக்கிவிடும்; விருப்போடு நூலைக் கற்கப்
பள்ளிக்கு வருகின்ற இளைஞர் தம்மைப்
பாதியிலே வெறுப்பூட்டி விரட்டும்; மற்றும்
வெள்ளையுள்ள மாணவரைப் பாதை மாற்றி
வேறுவழி தனில்செல்லத் தூண்டும்; **நல்லோர்**
**எள்ளுகின்ற நிலையிலுள்ள இந்தத் தேர்வு**
**ஏன்வேண்டும்? ஏன்வேண்டும்? யார்க்கு வேண்டும்?**

**-சென்னை பச்சையப்பன் கல்லூரிக் கவியரங்கக் கவிதை-**

# மறதி தேவை



நிகழ்ச்சியே மனக்கு ளத்தில்
நீந்திடும் முதலை! நாளை
நகர்த்திடும் காலத் தேவன்
நல்லதோர் வேட்டைக் காரன்!
அகத்துள்ள கவலை யெல்லாம்
அடியோடு வீழ்த்தி நம்மை
மகிழ்வோடு வாழ வைக்கும்
மருந்தொன்றே **'மறதி'** என்பேன்!

சின்னதோர் வயதில் பூங்காச்
சிறுதும்பி வாலில் முள்ளைப்
பின்னியே பறக்க விட்ட
பிழைச்செயல் மறந்த பின்தான்
மன்னிய 'வள்ளு வ'த்தை
வாயாரப் புகழத் தோன்றும்!
முன்னாளில் நிகழ்ந்த தெல்லாம்
மூடவோர் இடம்வேண் டாமா?

விழிகூடப் பார்வை தன்னை
விரைவிலே மாற்று கின்ற
வழிமுறை மறதி யென்னும்
மாண்புடைத் தத்து வத்தால்
எழிலுடன் அறியு மென்றே
ஏற்றதோர் உண்மை தன்னைக்
கழிபுகழ் அறிவு நூலார்
கருத்துக்கு விருந்தாய் வைப்பார்!

சிட்டைப்போல் திரிந்து, நாளும்
தேனிதழ் கடித்தே உண்டு
கிட்டாத மணத்தால், நெஞ்சம்
கிழிந்ததால், உயிரை, வாழ்வை
எட்டியைப் போல்நி னைத்தே
ஏங்கிடும் காத லர்க்குக்
கிட்டுமோர் மாம ருந்து
கேள்,கேள்,கேள்,! மறதி ஒன்றே!

தன்வீட்டில் விழும்பி ணத்தைத்
தாவியே அணைத்துக் கட்டிப்
புன்கண்ணீர் வடித்த தெல்லாம்
புகையைப்போல் மறதி மூட,
பின்செயல் ஆற்று கின்றோம்!
பிணக்காட்சி, இடுகா டெல்லாம்
வன்னெஞ்சில் நிலைக்கு மானால்
மனத்திலே அமைதி ஏது?

நோயாளி நகைக்க வேண்டின்
நுண்பொருள் மறதி தேவை!
சேய்கூட மறதி யால்தான்
சிரித்திடும்; குதிக்கும்; தாவும்!
ஓயாத தூக்கத் தெய்வம்
ஊட்டுமோர் அமுதம் என்றே
போயதன் காலில் வீழ்ந்து,
புவியெலாம் தவங்கி டக்கும்!

குத்துவாள் வலக்கை ஏந்திக்
　　கொலைசெய்தோன் குருதிக் கோலம்
நித்தமும் நினைவில் வந்தால்
　　நெஞ்சகம் நொறுங்கிச் சாவோம்!
பித்தனைச் சிரிக்க வைக்கும்!
　　பிணத்திற்கும் அமைதி சேர்க்கும்!
வித்தகர் ஆன்றோ ரெல்லாம்
　　'வினையெலாம் மறப்பீர்' என்றார்!

சாவது நாளை என்னும்
　　சரிஉண்மை தன்னை இன்று
ஓவிய மாக்கி நெஞ்சில்
　　உணர்வதால் அமைதி ஏது?
சாவினை, பாடை தன்னைச்
　　சற்றேனும் நினைத்தி டாமற்
போவதால் தானே இன்னும்
　　புகழ்வினை முடிக்கின் றோம்நாம்!

இயற்கையே! புளிப்பைத் தேக்கும்
　　எழிலார்ந்த மதுவில், ஈர்க்கும்
கயல்விழி மாதி டத்தில்,
　　கன்னல்சேர் குழந்தைப் பேச்சில்,
நயப்பொருள் நூலில் எல்லாம்
　　நற்பொருள் இதைஒ ளித்தாய்!
**முயன்றதை அடைவோம்! இன்றேல்**
　　**முட்டாள்கள் நாங்கள் என்பேன்!**




நீலவண்ண வான்சுவற்றில் சுண்ணம் பூசும்
நெடுமுகில்கள்! முகிலிடையே தங்கக் கோட்டால்
கோலமிடும் எழில்மின்னல்! மின்ன லூடே
குரல்கொடுக்கும் கள்ளஇடி! குருதி தேக்கி
மாலைவரும் மேல்வானம்! கருமை தூவி
மயங்கவைக்கும் இரவாட்சி! இவற்றைக் கண்டு
சேலாகித் துள்ளுகின்ற என்றன் நெஞ்சம்
சிறகுபெற்ற உரிமைநெஞ்சம்; **கவிதை நெஞ்சம்!**

கடலுக்குள் மீன்பாயும்; கண்கள் பாயா
காற்றுதவழ் பெருவெளியில் புட்கள் பாயும்;
இடைகாணாப் பருவப்பெண் விழியோ காளை
இதயத்தில் போய்மட்டும் பாயும்! ஆனால்
தடையேது என்றனுக்கே எங்கும் பாய்வேன்!
தாவிடுவேன்; பறவையடா! கேள்வி யில்லை!
மடைகாணாக் காட்டாறு; ஒளியின் கற்றை;
மலையருவி என்நெஞ்சம்; **கவிதை நெஞ்சம்!**

செல்வந்தான் இன்பமென்று கருமி சொன்னான்;
சேல்விழியே இன்பமென்று காமி சொன்னான்;
இல்லையடா வையகமே இன்பப் பூங்கா!
எல்லாமே உளத்திற்கு விருந்து! நானோ
சொல்லென்னும் விதையூன்றி இலக்கி யத்துச்
சோலையினைப் பயிராக்கும் 'தோட்டக் காரன்'!
புல்லுக்கும் கல்லுக்கும் கவிதை நெய்யும்
புதுச்சிற்பி! என்நெஞ்சம், **கவிதை நெஞ்சம்!**

தென்றலுக்குத் தென்றல்நான்! மறைந்து கூவும்
சில்வண்டின் நண்பனடா! கனவு வானில்
என்றென்றும் வாழ்ந்துவரும் இன்பச் சிட்டு!
இதயத்தில் பேரரசு காணும் மன்னன்!
குன்றெதிர்த்து வந்தாலும் உரிமை காக்கும்
கொள்கைக்கு நான்உடும்பே! அடடா, என்போல்
இன்றைக்கும் நாளைக்கும் நிறைவு கண்டோன்
இல்லையடா! என்நெஞ்சம், **கவிதை நெஞ்சம்!**



# குடும்பம் ஒரு நூல் நிலையம்

''சென்றாயா? சென்றே பின்பு
செய்தாயா?'' என்று கேட்டே
என்றைக்கும் கடமை தன்னை
எழில்பட உணர்த்தும் தந்தை
அன்றாடம் நான்முன் னேற
அறிவுரை தருவார் என்றால்,
குன்றென்பேன் அவரை! வாழ்வின்
**'குறள்நூல்'**தான் என்று சொல்வேன்!

''உடலுக்கே என்ன? நன்றாய்
உண்டாயா?'' என்று கேட்டு
மடையிலா அன்பால் நெஞ்சம்
மாறாத பண்பால் என்னைத்
தடையின்றி வளர்த்தாள் என்றன்
தாய்என்றால், அவளைத் தேடி
அடையாத தெய்வம் என்பேன்;
**'அன்புநூல்'** என்றே சொல்வேன்!

''வாடாத அன்பே! அத்தான்
வாருங்கள்'' என்ற ழைத்துப்
பாடாத குரலெ டுத்துப்
பழுதிலா இன்பம் சேர்க்கும்
தேடாத வாழ்வுச் செல்வம்
தெவிட்டாத இல்லாள் என்றால்,
ஆடாத கொடியை நானும்
**'அகப்பொருள் நூல்'**தான் என்பேன்!

''என்னப்பா? நிலவோன் ஓடல்
எதற்கப்பா?'' என்றே என்னைச்
சின்னதோர் வாய்தி றந்து
சிங்காரக் குழந்தை கேட்டுக்
கன்னத்தால் கன்னம் சேர்த்துக்
கட்டியே அணைக்கும் போதில்
என்னையே மறப்பேன் என்றால்,
**'இன்பநூல்'** மகவே என்பேன்!

குடும்பமே இன்பம் சேர்க்கும்
குளிர்நிறச் சோலை! எங்கள்
குடும்பத்தி லுள்ளோ ரெல்லாம்
கோதிலா நூல்கள் என்றால்
குடும்பத்தைக் குடும்ப மென்று
கூறினால் பெருமை எங்கே?
குடும்பமே சிறந்த **'நூல்கள்
குழுமிய நிலையம்'** என்பேன்!

# ஈழத் தமிழனுக்கு...



தோட்டத்தில் வியர்வைசிந்தும் தமிழா! சற்றே
        தூக்குன்றன் இமைக்கதவை; வரலாற் றைப்பார்!
ஏட்டுலகம் காட்டுகின்ற செய்தி யாவும்
        இனிக்குதடா நினைத்தாலும்; உன்றன் முன்னோர்
ஆட்டிவைத்தார் ஈழத்தை; இன்றோ உன்னை
        ஆட்டிவைக்கும் ஆட்சியினைக் காண்கின் றாயே!
மூட்டத்தைக் கிழித்தெறிந்து வெளியே வாவா!
        முறுக்கிவிடு மீசையினை; உயர்த்து தோளை!

விண்மீன்போல் சிதறிநிற்கும் தமிழர் கூட்டம்
        விரைந்தொன்றாய்க் கூடிவிட்டால் உலக மீதில்
விண்ணிலவாய் நாம்ஒளிர்வோம்; பகைமு டிப்போம்.
        விழலுக்கே ஆகுதடா, உழைப்பு யாவும்.
கண்ணீரைச் சொரிகின்றாய்; கலங்கு கின்றாய்;
        'கதியிலையா?' என்கின்றாய்; அட்டை கூடி
உண்ணுதற்குக் குருதிதந்து, பனியில் வாடி
        உடல்நடுங்கப் பாடுபட்டும் என்ன கண்டாய்?

நாம்கண்டோம்; ஐரோப்பா மக்கள் அன்று
        நாடுவிட்டே அமெரிக்க மண்ணைச் சேர்ந்தார்;
தாம்இன்று செல்வத்தில் உயர்ந்தார்; அந்தோ!
        தமிழ்த்தோழா, நீயுந்தான் போனாய்! ஆனால்
'யாம்உயர்ந்தோம்' எனஒருசொல் சொன்ன துண்டா?
        யானைசென்று நரியிடத்தில் இரப்ப துண்டா?
ஆம் உண்மை; பலஇலட்சம் இருக்கின் றோம்நாம்;
        ஆமையைப்போல் நடைபோட்டால் வாழ்வே யில்லை.

தாய்நாட்டுத் தமிழனுக்கோ இந்தித் தொல்லை;
    தணல்போன்ற சிங்களமோ உனக்குத் தொல்லை!
நாய்வாழ்வு வாழுதடா, தமிழச் சாதி
    நாகரிக முதல்மனிதன், நீயா? வெட்கம்!
ஓய், தமிழா! உலகத்து ஐ.நா.மன்றில்
    உனக்காக வாதாட ஒருவர் தேவை!
பாய்போட்டே உறங்கியது போதும்; இன்றே
    பாழ்விழியைத் திறந்துவிட்டுக் கழுவாய் தேடு!



# இறப்புக்குப் பின்னால்

தொட்டிலிலே துவங்குகின்ற அனைவர் வாழ்வும்
தூக்குகின்ற பாடையுடன் முடிதல் மெய்யா?
விட்டிலுக்கே இரவோடு முடியும் வாழ்வு;
வீறுபுகழ் வித்தகர்க்கோ இறுதி ஏது?
'பட்டய'மாய் உயர்'நடுகல்' பெருமை பாடப்
பார்மீது புகழ்மணக்க நிற்பார்! நெற்று
விட்டவுடன் மறைந்தவர்கள் மனிதர்; செத்தும்
விழியரங்கில் நடமிடுவோர் 'கடவு' ளானார்!

பொற்பானை உடைந்துவிட்டால் மிஞ்சும் தங்கம்!
போட்டுடைத்தால் மட்குடத்தை, என்ன மிஞ்சும்?
விற்காணா யானைசெத்தால் மிஞ்சும் தந்தம்!
விழிமூடி ஆந்தைசெத்தால் என்ன மிஞ்சும்?
பொற்புடைய காந்தியின்பின் பெருமை மிஞ்சும்!
போயழித்த கோட்சேபின் பழிதான் மிஞ்சும்!
கற்பூரச் சிமிழியிலே மணமே மிஞ்சும்;
கருவாட்டுச் சட்டியிலே என்ன மிஞ்சும்?

இறப்புக்குப் பின்னாலே மறுவீ டென்பார்;
எதைக்கண்டார்? எவர்சொன்னார்? பொய்பொய்; ஆனால்
சிறப்பான தொண்டாலே மக்கள் நெஞ்சத்
திருவீட்டில் நுழைவதையே 'நல்வீ' டென்றார்!
பிறர்சிரிக்கத் தான்அழுதோன் செத்தால், அன்னோன்
பிணத்தின்மேல் 'விழிநீ'ரைப் பொழியும் ஞாலம்!
பிறர்அழவே தான்சிரித்தோன் மடிந்தால், அன்னோன்
பிணத்தின்மேல் 'உமிழ்நீ'ரை உலகம் துப்பும்!

கெண்டைசெத்தால் வராலுக்குப் பசியோ நீங்கும்;
கிளிசெத்தால் பருந்துக்கே உணவாய் மாறும்!
அண்டையுள்ள ஆடுசெத்தால் மனிதன் தின்பான்;
அம்மனிதன் குழிபுகுந்தால் யார்க்கு நன்மை?
கொண்டுள்ள குருதி,தசை, நரம்பெ லும்பு
குவலயத்தில் நூறாண்டே நிலைக்கும்; ஆனால்
தண்டமிழ்க்கே தலையீந்தக் குமண னின்பேர்
சரித்திரத்தில் நிலைப்பானேன்? புகழே எஞ்சும்!

சொந்தஉடல் கொழுப்பதற்குக் கொலையைச் செய்து
தூக்கேறித் தொங்குபவன் 'விலங்கு'! இந்தச்
சொந்தஉடல் வளர்ப்பதற்கே உழைத்துத் தேய்ந்து
சுடுகாடு செல்பவனோ 'மனிதன்'! ஆனால்
சொந்தஉடல் செருப்பாக்கி உலகம் வாழத்
தொண்டாற்றி மறைபவனே 'தெய்வம்'! சொன்னால்
**இந்தஉடல் வாழ்வதெலாம் வாழ்வா? அல்ல!**
**இறப்புக்குப் பின்னால்தான் தொடங்கும் வாழ்வு!**

**-சென்னைக் கல்லூரிகள் தமிழ்மன்றப் போட்டிப் பரிசுக்கவிதை-**




**கவிஞன்:**

வானத்துப் பொய்கையிலே பூத்தி ருக்கும்
வண்ணஅல்லி வட்டநிலா! அக்கு ளத்தின்
மோனத்தைக் கலைக்கின்ற கயல்க ளாக
முறுவலித்து விண்மீன்கள் துள்ளக் கண்டேன்!

**விஞ்ஞானி:**

வானமொரு குளமல்ல! கண்ணுக் கெட்டா
வரம்புடைய வெட்டவெளி! நிலவோ அங்கே
தானாகச் சுழன்றுவரும் கோளம்! விண்மீன்
சந்திரனை விடப்பெரிய அளவில் கோடி!

**கவிஞன்:**

கடல்மங்கை களைந்துவிட்ட வெண்பட் டாடை
ககனத்தில் முகிலாகித் தவழும்! குன்றின்
உடல்மேவும் அதன்கரையே சரிகைக் கோடாய்
ஒளிமின்னல் எனும்பெயரில் மிளிரக் கண்டேன்!

**விஞ்ஞானி:**

அனல்உமிழும் கதிரவனால் தண்ணீ ரெல்லாம்
ஆவிநிகர் முகிலைப்போல் உருவெ டுக்கும்!
புனல்சொரியும் மேகங்கள் மோதும் போது
பொன்மின்னல் கொடிபோடும்; விழியை வெட்டும்!

கவிஞன்:

கருமுகில்கள் மழையளிக்க , பொறாமை கொண்ட
கதிரவனின் ஒளிக்கைகள் நீளும்! வானில்
அருமைவண்ண வானவில்லும் எதிரில் தோன்றும்!
அடடாவோ! இடிமுரசம் ஆர்க்கும்! போர்,போர்!

**விஞ்ஞானி:**

முகிலெல்லாம் தண்காற்றால் குளிரும் வேளை
மூடுபனித் துளிபோன்று மழையும் தூர
பகலவனின் ஒளிக்கதிரால் எதிர்ப்பு றத்தில்
பார்வைக்கே எழில்வான வில்லும் தோன்றும்!

**கவிஞன்:**

இயற்கைமங்கை பெற்றஇரு விழிகள் என்றால்
எழுகின்ற கதிரவனும் நிலவும் என்பேன்!
முயல்நிலவு உலகத்தைக் குளிர வைத்தால்
முகம்சிவந்த பரிதியவன் தீய வைப்பான்!

**விஞ்ஞானி :**

பகலவனும் வெண்ணிலவும் விழிக ளல்ல!
பரந்திருக்கும் இருஉலகம்! கதிரோன் தந்த
தொகையொளியைக் கடன்வாங்கி நிலவு தோன்றும்;
சொல்லிவிட்டேன்; நாம்நாளை அங்கே வாழ்வோம்!



# இலட்சியம்

உடம்பிலே எலும்பே யில்லா
உயர்'மேக'த் திற்கும் நன்செய்
இடமெலாம் மழையைப் பெய்யும்
'இலட்சியம்' உண்டு; ஆனால்
உடம்பிலே எலும்பைப் பெற்றும்
ஓடிடும் குருதி பெற்றும்
திடமிலாக் கொள்கை யின்றித்
திரிபவர் 'மனிதர்' தானா?

இடுகாட்டில் சேர்ந்த பின்னர்
இருக்கின்ற தசைந ரம்பும்
சடுதியில் மண்ணாய்ப் போகும்;
தன்பெயர் கூறு தற்கு,
'நடுகல்'தான் நிற்கும்; அங்கே
நாலொரு சொற்கள் ஏற
வடுவிலாத் 'தொண்டு' செய்து
வாழ்ந்திட வேண்டா மாநாம்?

'முல்லை'தான் மங்கை யர்தம்
முடிமீது ஏறும்; ஆனால்
கொல்லைப்'பீ நாறி'ப் பூவோ
குப்பையே சேரும்; தூய
நல்லதோர் கொள்கைக் காக
நல்லுயிர் பலிதந் தோரே
எல்லோரின் நெஞ்சில் நிற்பர்;
எஞ்சியோர் பெயர்கள் எங்கே?

'உடுத்தினோம்; உண்டோம்; நன்றாய்
உறங்கினோம்; மறைந்தோம்', என்று
முடித்தவர் வாழ்க்கை யெல்லாம்
முடங்கிய புழுவின் வாழ்க்கை;
அடுத்தவர் உயர்வுக் காக
ஆருயிர் முடித்தோர் தாமே
தொடுத்திடும் வரலாற் றேட்டில்
துலங்குவர் கதிர்போல் நின்றே!

# புதுமை



அண்டத்துப் புறவெளியில் தொங்கு கின்ற
அகிலத்தின் சுழற்சிஒரு புதுமை! வான
மண்டலத்து வெண்பஞ்சுள் ஒளித்து வைத்த
மாமழையின் பேரூற்று புதுமை! எண்ணி
விண்டுரைக்க முடியாத 'இறப்பு' வாழ்வின்
வியப்பூட்டும் கொடும்புதுமை! 'நேற்று' செத்தே
உண்டாகும் 'இன்'றைக்குப் புதுமை 'நாளை';
உரைத்திட்டால் புதுமைக்கே அன்னை 'காலம்'!

சலசலக்கும் நுரையருவி மலைப்பெண் ணாளின்
சரிகைஉடை எனப்புதுமைக் கவிஞன் சொன்னான்.
கலகலென அவள்எழுப்பும் மின்சி ரிப்பில்
காதலனோ பொழுதெல்லாம் புதுமை கண்டான்.
தலையசைக்கும் நெற்கதிரின் விளைவுக் கோலம்
தன்மான உழவனுக்கோ புதுமைக் காட்சி!
சிலைபோன்ற எழில்மழலை இதழில் சிந்தும்
தேனாற்றில் சுவைப்புதுமை காண்பாள் அன்னை!

'பழித்தாரா?' எனக்கொதித்துப் பாய்ந்து சென்று
பகைமுடித்த குட்டுவனின் வீரம்; சொந்த
விழித்தமிழைக் கேட்பதற்குச் செத்தேன் என்ற
வீறுபுகழ் நந்தியவன் துணிவு; நீதி
அழித்தவர்க்கே அதைஉணர்த்தி அழிந்து போன
அழகுமகள் கண்ணகியின் கற்பு; இங்ஙன்
செழித்தபல தமிழகத்துப் புதுமை கேட்டே
சீர்வையம் மூக்கின்மேல் விரலை வைக்கும்!

உலகம்ஒரு பந்துருண்டை என்று சொன்ன
உயர்மூளைக் 'கலீலியோ' வதைக்கப் பெற்றார்;
நிலையன்பின் வழிசொன்ன 'ஏசு' தன்னை
நெஞ்சொடியச் சிலுவையிலே அறைந்தார்; என்றும்
விலைபோகாச் சரக்கென்று 'சாக்ர டீ'சை
விடம்அளித்துக் கொன்றார்கள்; அதனால் இங்கே
தலைகீழாய்ப் புதுமையினைப் பழமை நோக்கும்;
சமர்முடிந்தால் இரண்டினிலே புதுமை வாழும்!

'செத்தவனை விழிக்கவைப்போம்; செவ்வாய் சென்று
செம்மாந்தே உலாவருவோம்', என்ப தெல்லாம்
முத்தான அறிவியலின் புதுமை! வானில்
மூளிநிலா முழுமதியாய் வளர்தல், தேய்தல்,
கத்துகின்ற கடல்உதைத்த பரிதிப் பந்து
காடடர்ந்த மேல்மலையில் விழுதல் எல்லாம்
சித்தத்தைச் சிலிர்க்கவைக்கும் புதுமை; ஆழ்ந்தே
சிந்தித்தால் **'அண்டம்ஒரு புதுமைக் கூடு'!**

✸



# உயிர்க் காட்சி சாலை

இடையினில் குடத்தை ஏந்தி,
இதயத்தில் என்னை ஏந்தி,
கடைவிழி தன்னில் ஈர்க்கும்
காந்தத்தை ஏந்தி, மெல்ல
நடைபயில் மங்கை நல்லாள்
நடந்திட்டால் காணும் போதில்
நிடதத்து நளன்கா ணாத
நீள்**'அன்னம்'** போலா கின்றாள்!

கோடைக்கோ இளநீர்; காதற்
கொடுநோய்க்கோ மருந்து; நெஞ்ச
மேடைக்கோ மறைதல் இல்லா
மின்னலாம்! அழகைக் கூட்டி
ஆடலில் அரசி! பெண்ணாள்
அங்கமோ தங்க மென்றால்,
நாடுடை பேகன் காணா
நல்**'மயில்'** போலா கின்றாள்!

காதுக்கோ இன்பம் சேர்க்கும்
கனிமொழி தருவாள்! நானும்
வாதுக்குத் தொடங்கி விட்டால்
வார்த்தையை நிறுத்தாள்; என்னைப்
போதுக்கும் தொத்தி வந்தே
புதுஇன்பம் தருவாள் என்றால்,
ஏதுக்கு வளர்த்து வானேன்?
எழிற்**'கிள்ளை'** போலா கின்றாள்!

காட்டினில் காண்ப தில்லை;
கானாற்றில் காண்ப தில்லை;
வீட்டிலே இருந்து நீங்கா
விழியன்பைப் பொழிவாள்; காதற்
தோட்டத்தில் புகுந்து துள்ளித்
துள்ளியே வருவாள் என்றால்,
கூட்டாளி யாகி வந்த
கொம்பில்**'மான்'** போலா கின்றாள்!

கண்களில் மயக்கம் சேர்த்துக்
கனிமுத்தம் கொடுக்கும் போதில்
**'வெண்புறா'** வானாள் என்றால்,
வியப்பென்ன? என்றும் என்றன்
எண்ணத்தில் நிலைத்து விட்ட
எழில்தனை, அவ்வைப் பாட்டி
உண்ணாத கனியை நானோ
**'உயிர்க்காட்சி சாலை'** என்பேன்!



# புகழ்

கோடிமக்கள் முகிழ்க்கின்றார் பூமிப் பந்தில்;
　　கோடிமக்கள் மறைகின்றார் ஆண்டுக் காண்டு;
வேடிக்கை! அவர்களிலே சிலரே மண்ணில்
　　மேன்மைமிகு 'வரலாற்றுத் தலைவ' ரானார்!
தேடிவைக்கும் மணி,வைரம், தங்க மெல்லாம்
　　செழித்திருக்கும் எழிலுடலம் எல்லாம் இந்தக்
கூடுசென்று குழியடையும் வரைதான்; சொன்னால்
　　குவலயத்தில் புகழொன்றே எஞ்சி நிற்கும்.

தனக்கென்றே அலைந்தழிந்தோன் சுவடே யின்றித்
　　தன்னோடு போய்ச்சேர்ந்தான் 'பிண'மாய்! ஆனால்
தனக்கென்ற நினைப்பொழித்துப் பிறருக் காகத்
　　தசையுடலைத் தந்தவனே 'கடவுள்' ஆனான்!
'உனக்கெடுத்த பசியொழிக்கத் தலையைத் தந்தேன்;
　　உடன்வெட்டிப் போ',என்றான் குமணன்; அந்த
வினைச்செயலால் புகழ்முகட்டில் ஏறி நின்றான்;
　　வீரருக்கோ ஒருமுறைதான் இறப்பு தோன்றும்.

தன்னுடலைத் தான்அழித்தே மணக்கும் இங்கே
　　தணல்குளிக்கும் அகிற்கட்டை; அதுபோல் கொண்ட
பொன்னுடலின் குருதியினை மண்ணில் பாய்ச்சிப்
　　புகழ்கொண்டார் ஏசுபிரான்! தோட்டத் திற்குள்
மன்னுசுரை, ஊமத்தம் பெரிய பூக்கள்
　　மண்டிமிகக் கிடந்தாலும் 'மகிழம் பூ'வைச்
சின்னஇடை மங்கையர்கள் தேடு வானேன்?
　　தியாகமொன்றே செத்தபின்னும் வாழ வைக்கும்!

சாவுக்கே அஞ்சுபவன் கோழை; அன்னோன்

சாய்க்கடையின் புழுவைப்போல் வாழ்ந்தும் செத்தான்!

மேவுகின்ற புகழுக்குச் சாவை ஏற்றோன்

மேதினியில் 'சாக்ரடீஸ்' போலே வாழ்வான்!

தாவுகின்ற முல்லைக்குத் தேரைத் தந்த

தமிழ்ப்'பாரி' நெஞ்சினிலே நின்றான்; பேசா

ஆவிற்கே நீர்வேண்டி இறந்திட் டாலும்

அணுகூட இலையென்றோன் மண்ணாய்ப் போனான்.

கனிகுலுங்கும் மாமரத்தில் சிறுவர் ஏறி

கதைபேசிப் பழம்பறித்துத் தின்பார்; ஆனால்

கனிகுலுங்கும் எட்டிமரம் அருகே செல்ல

காக்கைகளும் விரும்பிடுமா? எட்டி யைப்போல்

தனியுடைமை பேசுபவன் மடையன்; அன்றித்

தன்னுடைமை, பொதுவுடைமை என்போன் மட்டும்

மனிதருக்குள் புகழுடைமை சேர்த்துச் சென்றான்;

மற்றவரின் பெயரெல்லாம் எங்கே? எங்கே?

''எதிர்நிற்கும் மனிதர்களைப் பார்க்கின் றேன்நான்;

இடுப்பினிலே அரையாடை இல்லை; ஆனால்

எதற்காகக் கால்சட்டை, அங்கி யெல்லாம்

எனக்''கென்றார் காந்திமகான்; புகழைப் பெற்றார்.

உதிர்கின்ற விளாம்பழத்தின் உள்ளே தோன்றி

உள்ளேயே மடிகின்ற புழுக்க ளைப்போல்

உதிர்கின்ற மனிதரெலாம் மனிதர் தானா?

ஒதியமரம் இவரைவிட நன்று! நன்று!

ஆடுகின்றோம்; பாடுகின்றோம்; குதிக்கின் றோம்நாம்!

ஆண்டுகள்நூ றாகிவிட்டால் உடலம் எங்கே?

தேடுபவர் விழிகளிலே எஞ்சி நிற்கும்

திருச்சுவடு வேண்டாமா? 'நடுகல்' ஒன்றே

கூடணைந்த கல்லறைமேல் நிற்கும்; அங்கே

குறித்திட்ட 'புகழ்ச்சொல்'லே மிஞ்சும் சொத்து.

**நாடெல்லாம் கூடிவந்தே இறந்த நேரம்,**

**"நல்லவனே போனாயா?" என்றால் போதும்!**

பார்முழுதும் அழவைத்தோன் செத்து விட்டால்

பாடையிலே எச்சிலினைப் பெறுவான்; ஆனால்

பார்முழுதும் சிரிக்கவைத்தோன் செத்தால், அன்னோன்

பாடையிலே கண்ணீரைப் பெறுவான்; சோலைச்

சீர்அழிக்கும் பாம்பொன்று செத்துப் போனால்

சிதையேற்றி நெருப்பிட்டு மகிழ்வார்; தோப்புக்

கார்குயில்தான் உயிரிழந்தால் கூடி வந்து

கண்ணீரைச் சிந்திடுவார்; உண்மை என்ன?

புகழ்க்கோட்டை எழில்வாயில் திறக்க வேண்டின்

பொற்காசுப் பெட்டியின்வாய் திறக்க வேண்டும்.

புகழ்மங்கைப் புன்னகையைக் காண்ப தற்குப்

போய்அவளின் இணைத்தாளில் விழக்கூ டாது.

திகழ்கின்ற செல்வத்தை, உடலை யெல்லாம்

தீய்ப்பதற்கு நெருப்புண்டாம்; அணுகுண் டுண்டாம்!

அகல்விளக்காம் 'ஆபிரகாம் லிங்கன்' பெற்ற

அரும்புகழ்தான் குண்டாலே அழிந்த தாமோ?

மோதிரத்தின் பளபளப்பில் புகழா உண்டு?
முந்தானைச் சரிகையிலே புகழ்தான் உண்டா?
காததிரக் கையொலியைப் பெறுதல் கூட
கணக்கிட்டால் புகழாகத் தோன்ற வில்லை!
சாதலிலும் தமிழ்காக்கச் சாவை ஏற்ற
தமிழ்மறவர் புகழ்முகட்டில் ஏறி நின்றார்!
தீதென்றார் தமிழ்ப்பண்பை வடவர் என்றே
சினந்தெழுந்த குட்டுவனே புகழைப் பெற்றான்.

உலகமெலாம் தான்கவர்தல் புகழே என்ற
உன்மத்தன் 'இட்ல'ரினைப் போற்றி னோமா?
உலகமெலாம் நமைக்கவர வாழ வேண்டும்;
ஒப்பில்லா 'வள்ளுவ'ரும் இதைத்தான் சொன்னார்!
பலர்வருவார்; பலர்போவார்; ஆனால் இந்தப்
பார்அவர்கள் அனைவரையும் நினைப்ப தில்லை;
**சிலர்பெயரே புகழேட்டில் நிலைத்து நிற்கும்;**
**சிலருக்குள் நம்பெயரைச் செதுக்கி வைப்போம்!**

**-வேலூர் ஊரிசுக் கல்லூரிக் கவியரங்கக் கவிதை-**



# நெஞ்சம்

பிறவியே துன்பம், மண்ணில்
　　பிறப்பதே தொல்லை என்பார்!
பிறவியா துன்பம்? சேச்சே,
　　பிழைபிழை. உயிரை, மெய்யை
உறவிட்டுக் காட்டும் நெஞ்சம்
　　ஒன்றினை உடலம் மட்டும்
பெறவில்லை என்றால் இந்தப்
　　பெருந்தொல்லை துளியும் உண்டா?

கன்னியை அடைந்தால் துள்ளிக்
　　களிப்பதும் நெஞ்சம்! அந்தக்
கன்னியைப் பிரிந்தால் வாடிக்
　　கவல்வதும் நெஞ்சம்! மிக்க
பொன்பொருள் பெற்றால் நன்கு
　　பூரிக்கும் நெஞ்சம்! அந்தப்
பொன்பொருள் இழந்தால் சோர்ந்தே
　　போவதும் நெஞ்சந் தானே!

நடந்ததை எண்ணி எண்ணி
　　நவில்வதும் நெஞ்சம்! இன்று
நடப்பதைக் கண்டு கண்டு
　　நைவதும் நெஞ்சம்! என்ன
நடக்குமோ நாளை என்று
　　நாடியே வாடி வாடி,
உடலையே வதைக்கும் நெஞ்சம்,
　　உள்நெஞ்சம்! பாழும் நெஞ்சம்!

இன்பத்தைப் பெற்றால் நாளும்
இனிக்கின்ற நெஞ்சம், வாழ்வில்
துன்பத்தை அடைந்தால் மட்டும்
சோகத்தைப் பெருக்கு வானேன்?
அன்பினைப் போற்றும் நெஞ்சம்
அடுத்தநாள் கொலைசெய் வானேன்?
மன்பதை தன்னில் சொன்னால்
மடநெஞ்சே, கொல்லும் நஞ்சு!

இயற்கையே! மனித னுக்கே
'இருகால்கள்' படைப்பாய்! நல்ல
செயல்பல முடிக்க நீண்ட
'திருக்கரம்' படைப்பாய்! இன்னும்
பயன்உறுப் புக்கள் நூறு
படைப்பாய்நீ நன்றி! ஆனால்
**தயைசெய்து 'நெஞ்சம்' ஒன்றைத்**
**தவறியும் படைக்க வேண்டாம்!**

★

# தமிழ் இசை



வானகத்து மலர்க்காட்டில் பூத்திருந்த உடுக்கள்
மறைகின்ற விடிகாலை! படுக்கைவிட்டே. எழுந்தேன்!
மானமுள்ள வயல்உழவர் ஏர்தூக்கிச் செல்லும்
மாண்புதனைக் கண்ணுற்றேன்; மேல்நடந்தேன்! என்றன்
மோனத்தைக் கலைப்பதுபோல் சில்வண்டின் ஓசை
மோதியது ஓடிவந்து என்செவியில்! ஆங்கே
தேனடையைச் சமைக்கின்ற ஈக்கள்தந்த ஒலியும்
தெவிட்டாத இன்பமுடன் புகுந்ததென்றன் செவியில்!

சோற்றுக்கு வழியமைக்கும் வயல்கண்டேன்; சாய்ந்து
தொங்குகின்ற நெற்கதிரைக் கண்ணுற்றேன்; ஆங்கே
ஏற்றத்தைப் பிடித்தபடி நீர்இறைக்கும் உழவர்
இருவர்தமைப் பார்த்திட்டேன்! அன்னவர்கள் சேர்ந்து
மாற்றியங்கே இசைகூட்டிப் பாடுவதைக் கேட்டேன்!
மனமெல்லாம் பூரித்தேன்! 'தமிழிசையே! உன்றன்
ஏற்றமென்ன சொல்லிடுவேன்! உழைப்பவரின் களைப்பை
இல்லாமல் செய்கின்றாய்! வாழ்க!' வென்றேன்; சென்றேன்

அசைந்தாடும் தென்றலொடு மேல்நடந்தேன்; மெல்ல
அலைதவழும் ஏரியினை அடைந்திட்டேன்; ஆங்கோர்
திசையினிலே சலவைசெய்வோன் அழுக்காடை சேர்த்துத்
'திம்திம்'மென் றேகல்லில் வெளுத்துக் கொண்டிருந்தான்;
இசைசேர்த்தே அவன்உதடும் பாடுவதைக் கேட்டேன்;
இறும்பூதும் அடைந்திட்டேன்; 'இசைத்தமிழே! உன்னால்
தசைநோகப் பாடுபடும் பாட்டாளி துன்பம்
சற்றேனும் மறக்கின்றான்! வாழ்க!'வென்றேன்; சென்றேன்.

ஊர்அருகில் நெருங்கிவந்தேன்; தெருக்கோடி வீட்டில்
ஒருமனிதன் உலகத்தை மறந்தானாம்; அவனைப்
பார்ப்பதற்கும் துக்கத்தைப் பகிர்வதற்கும் கூடிப்
பக்கத்து வீட்டிருந்த மாதரெலாம் வந்தார்.
சேர்ந்தபின்னர் அன்னவர்கள் செத்தவனின் மாண்பைச்
சிதையாத தமிழிசையால் வடித்துவைத்தே அழுதார்!
'பேர்பெற்ற இசைத்தமிழே! ஒப்பாரி வைக்கும்
பெண்களெல்லாம் உன்பெருமை அறிந்துள்ளார்!' என்றேன்.

சொல்லிடுவீர்! தொல்லுலகில் வாழ்த்துதற்கும் கூடித்
துதிப்பதற்கும், தாலாட்டுப் பாடுதற்கும், சேர்ந்து
கொல்லையினில் பாடுபட்டே உழைப்பதற்கும், மாண்டோர்
குணங்கூறி அழுவதற்கும், அனைத்திற்கும் இசையைப்
பல்லாற்றும் பயன்படுத்தும் மொழிஎங்கே உண்டு?
பண்சேர்ந்த ஒலியுடனே இனிமையையும் கூட்டி
எல்லோரும் எத்துறைக்கும் இசைக்கின்ற நந்தம்
**இன்பமொழி தமிழைப்போல் வேறெங்கே உண்டு?**

✶



# குறள் விளக்கு

'பகுத்துண்டு பல்லுயிரை ஓம்ப வேண்டும்'
பாருக்கு வள்ளுவரே முதலில் சொன்னார்.
வகுத்திதையே 'மூலதன' நூலில் பின்னால்
வடித்தவரே 'காரல்மார்க்ஸ்'; இதுபோல் 'தீய
பகைவருக்குத் தண்டனைதான் நன்மை செய்தல்'
பக்குவமாய்ச் சொன்னவரும் குறளார் தானே!
நகைமுகத்தால் 'மறுகன்னம் காட்டாய்' என்ற
நாடறிந்த 'ஏசுபிரான்' இவரின் தம்பி!

'எப்பொருளை யார்யார்வாய்க் கேட்ட போதும்
ஏற்றதையே கொள்க!'வென்று குறளார் சொன்னார்.
'சிப்பியெலாம் முத்திருக்கும் எனநம் பாதே;
சிந்தி'என்ற 'சாக்ரடீஸ்' இவரின் தோழர்!
'இப்புவியில் கொல்லாமை நோன்பை ஏற்றோன்
இறைவ'னென்றே வள்ளுவரும் சொன்னார்; 'மண்ணின்
செப்பைப்போல் உடைகின்ற உடல்வ ளர்க்கச்
சிதைக்காதீர் உயிர்களையே', என்றார் 'புத்தர்'.

'மழித்தலிலும் நீட்டலிலும் பொருளா உண்டு?
மாவையம் பழிப்பதையே ஒழிக்க வேண்டும்',
செழிப்பான பகுத்தறிவு விதையை அன்று
சீரோடும் ஊன்றியவர் குறளார்! இங்கே
'விழித்திருக்கும் விழியெல்லாம் விழியே அல்ல;
விழுங்கல்வி விழி'யென்றார்; 'இரந்தே வாழ
பழிச்சட்டம் படைத்தவனும் கடவு ளென்றால்
பாவியவன் அழிக!'என்றே புரட்சி செய்தார்!

'கனியிருக்கக் காய்பறித்தல் அறிவா?' என்றார்;
　　'காலத்தால் ஞாலத்தை வெல்வோம்', என்றார்;
'வினைமுடிக்கும் திடமிருந்தால் தெய்வம் செய்த
　　விதிச்சட்டம் தூள், தூள், தூள்,' என்றார்; 'சொந்த
மனையிருக்கப் பொதுமகளை நாடிச் செல்வோன்
　　மாண்பில்லா பிணம்தழுவி' என்றார்; 'உச்சி
நுனிக்கொம்பில் ஏறாதீர்', என்றார்; 'கற்ற
　　நூலளவே அறி'வென்று உரக்கச் சொன்னார்.

'வையகத்து மாந்தரெலாம் சேற்றில் நிற்கும்
　　வயல்உழவர் காலடியில்', என்றார்! 'மாற்றார்
கையகத்துச் சோற்றுக்கு மானம் விற்றோன்
　　கால்தூசு இவ்வுலகில்', என்றார்! இங்கே
'தையலுக்குக் கற்பொன்றே உயிர்தான்' என்றார்!
　　'தாழ்எங்கே அன்புக்கே?' என்றார்! 'தாழ்ந்து
'ஐய!' என்றே இரப்பவர்க்கே இல்லை என்றோன்
　　அழிந்துவிட்ட பிண்ட'மென்றே அடித்துச் சொன்னார்.

ஆயிரத்து முந்நூற்று முப்ப துக்குள்
　　அண்டமெலாம் அடக்கியவர் இவரே! அன்னார்
வாயிருந்து பிறந்திட்ட கருத்தாம் ஊற்றே
　　வையமெலாம் அறிவாகக் கண்டோம்; தோன்றி
ஆயிரங்கள் இருமடங்கு ஆண்டா னாலும்
　　அழியாத 'கருவூலம்' படைத்தார்; அஃது
ஞாயிறுள்ள வரையிங்கே வாழும்; அந்நூல்
　　ஞாலமெலாம் பரப்புதற்கு வழிகள் காண்போம்!

*




காக்கைக்கே தன்குஞ்சு பொன்குஞ் சென்றால்
        கவின்மயில்தான் தன்மகவைப் புகழ்தல் தீதா?
நாக்குள்ள சிலரிங்கே சிறப்பாய் உங்கள்
        'நற்றமிழின் புதுமைஎன்ன?' என்றார், தோழி!
பூக்காட்டை விரும்புதற்குக் கார ணத்தைப்
        பொழிப்புரையாய்ச் சொல்வதில்லை; எனினும் செந்தேன்
ஈக்கூட்டம் தமிழ்க்காவில் மொய்ப்பத ற்கே
        இருக்கின்ற விந்தைசில எடுத்து வைப்போம்.

'திருத்தக்க தேவர்' ஒரு முனிவர்; வாழ்வில்
        திருமணமே காணாத துறவி; அன்னார்
கருத்துநிறை 'சீவகனின் கதை'யை நீண்ட
        காவியமாய் வடித்திட்டார்; தொட்டால் போதும்;
விருத்தமெலாம் காதல்சுவை! விந்தை, விந்தை.
        வேறொருவர் 'முன்றுறையின் அரசர்'; நல்ல
பொருத்தமுள்ள அரண்மனையில் வாழ்ந்தார்; ஆனால்
        பொன்மொழியாம் 'பழமொழி'யை நூலாய்ச் செய்தார்!

கேரளத்து மண்ணகத்தில் தமிழொ லித்த
        கெழுமியதோர் காலத்தில் 'இளங்கோ' வாழ்ந்தார்;
ஊரகத்தை ஆள்வதற்குப் பிறந்த செம்மல்;
        உயிரெழுத்தை, மெய்யெழுத்தை இணைத்துச் சேர்த்துப்
பேரகமாம் மூன்றான தமிழ கத்தைப்
        பெருமைமிகு காப்பியத்தால் ஒன்றாய்ச் சேர்த்தார்.
ஓரகத்தில் காவிரியின் கரையில் வாழ்ந்த
        உயர்தூய 'குடிமக'ளைப் புகழ்ந்து சென்றார்.

''அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பா?'' என்றே
அரைமூளை மனிதரின்றும் கேட்பார்; ஏட்டுத்
துடுப்பாலே இலக்கியத்துப் படகை அன்று
தொலைதூரம் செலுத்தியவள் பெண்தான்! செய்யுள்
தொடுப்பதற்கே 'யாப்புநூல்' ஆக்கித் தந்த
தூயவளே 'காக்கைபா டினி'தான் தோழி!
'பொடிப்பொடியாய் ஆக்கிவிடு பகையை!' என்று,
'பொன்முடி'தான் புதுக்கவிதை தீட்டிச் சென்றாள்.

இவையெல்லாம் விந்தையல்ல தோழி! நெஞ்சம்
இனிக்கின்ற 'குறள்'தந்தார் ஒருவர்; இன்றோ
புவிகூடிப் புகழ்கின்ற தவரை; அந்தப்
புலவர்தம்மைப் பற்றியொரு வரியும் நூலில்
தவறியுமே குறித்தாரா? உலகோர் கூடித்
தமக்கேதாம் அவர்சொந்தம் என்றே சொல்வார்!
இவைதோன்றி இரண்டாயி ரங்கள் ஆண்டோ
இறந்ததிங்கே! நூல்களெலாம் இறந்த துண்டா?

இன்னும்கேள்! ''இருந்தமிழின் பாடல் கேட்டால்
இறப்பாய்நீ; சரிதானா?'' என்றார்; நந்தி
கன்னல்தமிழ் கேட்பதற்கே உயிரைத் தந்தான்.
கதைகூட இனிக்குதடீ! தான்போ னாலும்
இன்னலின்றி தமிழ்ஔவை வாழ்வ தற்கே
இறை'அஞ்சி' அருங்கனியை எடுத்துத் தந்தான்.
சின்னஇடைப் பெண்ணே!நீ கேள்,கேள்,! நந்தம்
**செந்தமிழ்போல் விந்தைமொழி எங்கே உண்டு?**

# தமிழ்ச்சாதி



'ஐயங்கள் நெஞ்சை அடைத்தே உள்ளன;
அவிழ்க்கட்டு மாநான்? தோழா!' - 'நீ
பையவே அவற்றை வெளியே கொணர்ந்து
பதிலைக் கொள்ளடி, தோழி!'

'கடாரம், ஈழம், இமய வெற்றிகள்
கற்பனை யாமே தோழா!' - 'அடி
சடாரென் றவர்க்கே 'பட்டய' மெல்லாம்
சான்றாய்க் காட்டடி தோழி!'

'ஓதுகின் றாரே தமிழர் குறுகிய
உளத்தவர் என்றே, தோழா!' - 'இங்கே
யாதும் ஊரே யாவரும் கேளிர்
என்றவன் தமிழன், தோழி!'

'சாதிக ளுக்கே கதவைத் திறந்தவன்
தமிழன் என்றாரே தோழா!' - 'அடி
சேதியைக் கேள்கேள்! 'ஜாதி' என்பதே
செந்தமிழ்ச் சொல்அல்ல, தோழி!'

'அறிவியற் கலையும் தமிழர் மண்ணுக்கே
அறிமுக மிலையாம், தோழா!' - 'ஆய்வு
நெறியில் அமைந்த தொல்காப் பியத்தை
நீட்டடி அவர்முன் தோழி!'

'இன்றையக் கலைகளை ஆங்கிலம் போலே
இயம்புமோ தமிழ்தான்? தோழா!' - 'அடி
சென்றஓர் ஆயிரம் ஆண்டுக்கு முன்னர்
செழித்ததோ ஆங்கிலம்? தோழி!'

'பழமையைப் பேசிப் பெருமை யடிப்பவர்
பைந்தமிழ் நண்பராம் தோழா!' - 'அன்னை
குழவிக்கு நித்தம் முத்தம் அளித்தல்
கொடியதோர் தவறா? தோழி!'

'பிறமொழிச் சொல்லை ஏற்பத னாலே
பிழைதான் ஏது? தோழா!' - 'வழி
திறந்தத னாலே 'தரங்கம் பாடி'யை
'டிரங்குபார்' ஆக்கினார் தோழி!'

'தமிழர்கள் இன்று நிலைதடு மாறித்
தவித்து நிற்பதேன்? தோழா!' - 'நெஞ்சச்
சிமிழியில் வைத்த தன்னம் பிக்கையை
சிதறவே விட்டனர், தோழி!'

'உமியைப் போலே தமிழச் சாதி
உதவாக் கரையோ? தோழா!' - **'தூங்கும்
இமைகளைத் திறந்து தமிழர் விழித்தால்
இவர்க்கே பெருவெற்றி, தோழி!'**

# விலங்கறுந்தால்

புரியாத மொழிக்காரன் ஆட்சி ஓயும்!
புரிந்தவரே நமையெல்லாம் ஆள்வார்! மேலும்
நரிக்குணத்து பனியாக்கள் சுரண்டல் போகும்!
நம்மொழியும் நம்நாடும் நமக்கே ஆகும்!
'எரியுதடா வயி'றென்று தோணி ஏறி
ஏகுகின்ற நம்மவர்கள் தொகையும் தேயும்!
உரிமையெலாம் நிலைகாணும்! 'திராவிட'த்தின்
உயர்பெருமை உலகமெங்கும் மணம்ப ரப்பும்!

இந்திமொழி யேஅனைத்தும் கட்டி யாளும்
இழிச்சட்டம் மண்ணோடு மண்ணாய்ப் போகும்!
தந்திரமாய் 'சக்ளா'வும் 'விசய லட்சுமி'
சகாக்களுமே தூதுவராய் அயல்நா டேகும்
சொந்தமெலாம் போயழியும்! நமக்கு நாமே
சுயமாகச் செயலாற்ற இயலும்! தில்லிப்
பந்தமெலாம் காற்றோடு பறக்கும்! 'நான்சென்ஸ்'
பண்டிதரின் சுழல்நாக்கு ஓய்வு காணும்!

'கீதையொன்றே நீதிசொலும் நூலா' மென்னும்
கிழக்கொள்கை சாக்காட்டுக் கேகும்! நேர்மைப்
பாதைக்கே ஒளியேற்றும் 'குற'ளை இந்தப்
பாரெல்லாம் உணர்ந்துவிடும்! உலக மக்கள்
ஆதரவால் திராவிடத்தின் தலைவர் சென்று
ஐ.நா.வில் கருத்துரைகள் தருவார்! ஈங்கே
'ஏதுமிலை, ஏதுமிலை' என்னும் சொற்கள்
இல்லாமல் மாய்ந்தொழியும்! இன்பம் வாழும்!

# கல்லூரிகளில் கன்னல் தமிழ்



நாவிலெலாம் நெஞ்சிலெலாம் ஆட்சி செய்யும்
 நற்றமிழாள் எம்மன்னை அரசில் ஏறிப்
பூவிரித்துப் புகழ்விரித்து விளங்கும் நேரம்
 புதுச்செய்தி வந்ததடா, மகிழ்வால் உள்ளம்
தாவியது வானகத்தில்; அறிவு சேர்க்கும்
 தமிழகத்துக் கல்லூரி எங்கும் நந்தம்
**ஆவிநிகர் செந்தமிழே பயிற்று விக்கும்**
 **அருமொழியாய் அமைந்திடுமாம், இன்பம் என்னே!**

'கரிகாலா வாஸ்திகிரேட் கிங்'கென் றீங்கே
 கல்லூரி களில்நேற்றுப் பயின்றோ ரெல்லாம்
'கரிகாலன் ஒருபெரிய அரசன்' என்று
 கனித்தமிழில் பயின்றிடுவார்; இனியு மிங்கே
புரியாத மொழியில்லை! பாட மில்லை!
 பொருளியலும் அறிவியலும் கணக்கு நூலும்
தெரிந்துசொலத் தமிழணங்கு புகுந்தாள், ஆகா!
 செகமெல்லாம் தமிழ்மணக்க அட்டி ஏது?

நேற்றுவரை அறிவுக்கே அரண மைத்து
 நீதியின்றி ஒருசிலரே பயிலும் வண்ணம்
வேற்றுமொழி ஆட்சிசெய்த கால மெல்லாம்
 வெற்றுரையாய்ப் போனதடா! இன்று கன்னல்
சாற்றைப்போல் பெருமகிழ்ச்சி சேர்த்தே, 'ஆட்சித்
 தமிழ்வளர்ச்சி ஆராய்ச்சிக் கழகம்' செய்த
ஏற்றமிகு முடிவென்னே? இனிமேல் சங்கத்
 திருந்ததமிழ் பரவாதோ உலக மெங்கும்?

என்றுமுள தென்றமிழே! தாயே! தொன்மை
இடமுனக்கு அளித்தவரை வாழ்த்து! வண்மை
குன்றாத பொருட்செறிவால், சொல்லால் எங்கள்
கூரறிவு பெருகச்செய்! நாங்க ளெங்கும்
வென்றியினைச் சூடிவர வழிகள் காட்டு!
வியப்பூட்டும் அறிவியலில் மேன்மை காண
என்றென்றும் அருள்புரிவாய், தாயே! **உன்றன்**
**இணையடியைத் துணைகொண்டால் குறைதான் ஏது?**

**(1956-1957 இல் கல்லூரிகளில் தமிழ்**
**பாடமொழியாக்கப்பட்டபோது யாத்த கவிதை)**




இறுமாப்புக் கொள்கிறேன், தோழா!
எழிலார்ந்த தமிழ்நாட்டில் பிறந்ததால் - நெஞ்சில்
இறுமாப்புக் கொள்கிறேன், தோழா!

நறுந்தமிழ்ப் பூங்காவில் நானூறு வகையான
நல்லிலக் கியப்பூக்கள் மணக்கின்ற நாடு - உயர்
குறளெனும் பொதுச்சட்டம் குவலயத் திற்கீந்து
குன்றுபோல் பெரும்புகழ் குவித்தசீர் நாடு!

(இறுமாப்பு)

ஒருத்திக்கே ஒருவனும் ஒருவனுக் கொருத்தியென
ஒப்பிலாப் பெருநீதி உடையதிரு நாடு - கற்புக்
கருத்தாலே வையத்தின் கண்ணிமைகள் உயரவே
காலமும் புகழ்தனைக் கண்டவள நாடு!

(இறுமாப்பு)

பூகம்பம் தோன்றாத பொன்பூத்த நன்னாடு
பொங்கிடும் எரிமலை காணாத நாடு - என்றும
தாகந்த ணிக்கின்ற தண்ணீரோ வெண்பனித்
தண்பாறை யாகாத தனிப்பெரும் நாடு!

(இறுமாப்பு)

விழிஇமைப் பினும்போரில் வீரமே அலவென்று
வியத்தகு தத்துவம் படைத்ததொரு நாடு - மானப்
பழிக்கஞ்சி உயிரையே பலியிட்ட மாவீரர்
பலர்வாழ்ந்த பெருநிலப் பைந்தமிழ் நாடு!

(இறுமாப்பு)



# எழிலார் ஈழம்

கத்திடும் கடல்க டந்தே
        கலமேறி ஈழம் கண்டேன்!
எத்தனை அரிய காட்சி;
        இயற்கையின் எழிலார்'ஆட்சி!
பித்தனாய் ஆனேன்! விட்டுப்
        பிரிந்திட நெஞ்சம் எங்கே?
பத்தல்ல, பதினொன் றல்ல;
        பலநூறு விந்தை கண்டேன்!

சிற்றோடை, அருவி, நெஞ்சம்
        சிலிர்த்திடும் மலைகள், பச்சைப்
புற்றரைக் கம்ப ளங்கள்,
        புன்னகை உதிர்க்கும் பூக்கள்,
நெற்றவிழ் தென்னை, உள்ள
        நினைவீர்க்கும் இரப்பர்க் காடு!
வெற்றுரை அல்ல தோழா!
        விண்ணிலே பறக்கக் கண்டேன்!

இசைத்தமிழ் வளர்த்த ஈழம்
        இலக்கணம் வளர்க்கக் கண்டேன்!
தசைநோகப் பணிகள் செய்யும்
        தமிழ்வழித் தோழர் கண்டேன்!
விசையூர்தி வாக னங்கள்
        விரைந்திடக் கண்டேன்! சொன்னால்
பிசகேது? நண்பா! அன்னார்
        பேச்சிலே இசையைக் கேட்டேன்!

உடலினைச் சிலிர்க்க வைக்கும்
உயிர்காட்சி சாலை; பண்டை
நடையுடை உணர்த்தும் தொன்மை
நற்பொருட் காட்சி சாலை;
கடலலை முரசம் கொட்ட,
கடுங்காற்று கொம்பை ஊத,
படையினை இயக்கிச் செல்லும்
பாராளு மன்றங் கண்டேன்!

கண்டனன் **'கண்டி'** தன்னை
ககனத்தில் பறந்தேன்! தங்கக்
கெண்டைகள் துள்ளும் ஏரி
கிளைசூழ்ந்த குன்றம்! நந்தம்
பெண்டுகள் குழந்தை தம்மைப்
பின்னுள்ள முதுகில் தாங்கித்
தொண்டாற்றும் காட்சி கண்டேன்;
துயரத்தை நெஞ்சில் கொண்டேன்!

சிகரத்துள் சிகரம் ஆகி
செழிப்பெலாம் தேக்கி வைத்த
'நகரத்துள் ஒளி'யாம் அந்த
நந்**'நுவ ரேலி யா'**வைப்
புகழவும் சொற்கள் உண்டா?
பொலிவடா, பொலிவே எங்கும்!
நகரவே உள்ள மில்லா
நகரமாம் அஃதே என்பேன்.

திகைப்பினால் மயங்கி நின்றேன்;
**'திரிகோண மலை'**யின் ஊற்றோ
தகித்திடும் வெந்நீ ராகித்
தரைநின்று பொங்கக் கண்டேன்.
மிகையல்ல; இயற்கை யன்னை
விரிகடல் ஆழ மாக்கி,
தொகையாகக் கலங்கள் தம்மைத்
துறைநோக்கி அழைக்கக் கண்டேன்!

அழிந்ததோர் சரித்தி ரத்தை
**'அனுராத புர'**த்தில் கண்டேன்;
பழியிலா புத்தர் கொள்கை
பரவிய மூலங் கண்டேன்!
வழிகாட்டும் அன்னோன் வாழ்ந்த
வரலாற்றில் கதையைக் கண்டேன்.
விழிகளை விரிய வைக்கும்
மிகப்பெரும் ஏரி கண்டேன்.

வண்டமிழ் **'யாழ்ப்பா ண'**த்தார்
வாழ்கின்ற மண்ணில் இன்னும்
பண்டைய பண்பா டுன்றிப்
பலவாறு தழைக்கக் கண்டேன்!
'தண்டி'யைத் திகைக்க வைக்கும்
தனித்துறைக் கவிஞர் கண்டேன்!
உண்டான செய்தி யாவும்
உரைத்திடச் சொற்கள் எங்கே?

'ஈழ'த்தில் தலையாய் உள்ள
எடுப்பான **'கொழும்'**பில், பல்லோர்
வாழிடம் 'யாழப்பா ண'த்தில்
மணந்திடும் 'ழ'கரம் கண்டேன்.
சோழன்நம் 'இராச ராசன்'
சுடர்வெற்றி கண்ட மண்ணில்
வாழ்ந்திடும் தமிழைக் கண்டு
வாய்மீதில் விரலை வைத்தேன்!

**- ஈழ வானொலியில் அரங்கேற்றிய கவிதை -**



# கனவு நினைவாகாதா?

திருநாடு பொன்னாடாய் மாறி டாதா?
　　செகத்தரங்கில் முதல்மனிதர் நாம்தான் என்ற
பெரும்புகழைத் 'தமிழர் இனம்' பெற்றி டாதா?
　　பேசுகின்ற நம்தமிழை உலகோர் எல்லாம்
அருமைமொழி எனஒருநாள் கூடி வந்து
　　'அனைத்துலக மொழி' என்றே சொலமாட் டாரா?
எருமைகளைப் போல்கலங்கள் இங்கு வந்தே
　　ஏற்றுமதிப் பொருள்களுக்கே தவம்செய் யாதா?

எல்லோரும் எல்லாமே பெற்ற தாலே
　　எங்கெங்கும் நிறைவின்பம் தவழ்ந்தி டாதா?
'இல்லாத நாடுகளுக் குதவி செய்ய
　　இருக்கிறது தமிழ்நாடும்', எனச்சொல் வாரா?
பல்வகையில் அறிவியலின் கலைகள் கற்றுப்
　　பயிற்சிபெற உலகமிங்கு கூடி டாதா?
'இல்லாத தொழில்உண்டா? செழுமை உண்டா?'
　　எனவையம் பொறாமையுடன் பேசி டாதா?

அனைவருக்கும் பொருந்துகின்ற 'குறளின் சட்டம்'
　　'அனைத்துலகப் பெருஞ்சட்டம்' ஆகி டாதா?
வினைவலியும் தனிவலியும் பெற்ற தாலே
　　வியனுலகச் சிக்கலெலாம் களைவ தற்கே
அனைத்துலகப் பெருமன்றம் ஐ.நா. சென்றே
　　'அருந்தமிழ்நாட் டுத்தலைவர்' பேசு வாரா?
கனவெல்லாம் நனவாகும் நாள்வா ராதா?
　　காலமெனும் பெண்மகளே! விழியைக் காட்டு!



# திருப்பாசூர்

**முன்னுரை:**

'தொன்மதுரை முதற்சங்கம் இருந்தான்' என்று
சூலமுள்ள சங்கரனும் மெய்யோ? பொய்யோ?
இன்றெதிரில் கவியரங்கில் தலைமை யேற்கும்
ஈடில்சங் கரனாரை வணங்கி, ஈன்ற
தென்றமிழாள் தாள்வணங்கி, கூடி யுள்ள
சீரேந்தும் அறிஞர்களை வணங்கி, ஈங்கே
ஒன்றிரண்டு பாடல்களால் **திருப்பா சூரின்**
ஒண்பெருமை சொலவந்தேன்; பிழைபொ றுப்பீர்!

**ஊர்:-**

சோற்றுக்கே உரியதென்று சோணாட்டைச் சொன்னார்கள்;
கூற்றான யானைகட்கே கூறினார் மலைநாட்டை;
பணம்போகும் முத்துக்கே பாண்டியினைக் குறிப்பிட்டார்!
குணமுடைய சான்றோரின் குடியிருப்பே தொண்டையென
பாடிவிட்டுப் போய்விட்டார் பாவலரும் நாவலரும்!
நான்பிறந்த பகுதியென்று நாப்பறையை அடிக்கவில்லை;
கூன்விழுந்த கிழவிகளும் கூறிடுவார் கேளுங்கள்!
நம்மிடையே இளங்கோக்கள் நான்மறைசெய் வள்ளுவர்கள்
''இம்''மென்னு முன்பாடும் எழிற்காள மேகங்கள்
'ஹோமர்' முதல் 'தாந்தே'வரை உலகத்துக் கவிஞர்களை
ஆமிங்கே வெல்லுதற்கே ஆயிரமாய் உள்ளார்கள்!

கூடியுள்ள அறிஞர்களே! கூறிடுவேன் சினம்வேண்டாம்!
பாடியுள்ள அன்னவரில் பைந்தமிழர் கடந்துவந்த
தூயவர லாறுசொல 'தூசிடைட்சு', 'ஹெரடாடஸ்'
ஆயபலர் தோன்றவில்லை; அப்பெரிய குறைநீக்க
'திருப்பாசூர்' எனும்பெயரில் சீருடன் இவ் வூர்உளது!
நெருப்பனைய தமிழினத்தார் நின்றநிலை அது கூறும்!
பல்லவரின் காலத்தில் பாடல்பெற்ற தலமாகி
வெல்லரிய சோழர்களால் வியன்புகழின் முகடெய்தி
விசயநகர் மன்னர்களால் மேன்மேலும் பெருமையுற்று
பிசகிழைத்த தமிழர்களால் பின்னடைந்த இப்பாசூர்
தமிழகத்து வரலாற்றுத் தத்துவத்தின் பெருங்கதைக்கோர்
சிமிழைப்போல் விளங்குகின்ற சிறப்பான ஊர்என்பேன்!
ஒன்றல்ல, இரண்டல்ல; ஒருநூற்றின் அரையளவாய்
இன்றிலங்கும் கல்வெட்டோ எத்தனையோ பொருள்உணர்த்தும்!
தென்னாட்டின் 'சீச'ரென்று தீரனாய்த் திகழ்ந்திட்ட
மன்னர்கோன் இராசரா சன்காலம் முதலாக
சின்னாட்கள் நமையடிமை செய்துவிட்டுப் போய்விட்ட
புண்ணியர்கள் வெள்ளையரின் பூர்வகதை வரையுமுண்டு.
இன்றைக்கு நமையாளும் இரக்கமுள்ள பேரரசோ
இருக்கிறதா, பூதானம் சம்பத்து தானமென்றே
இரக்கின்ற நிலைதன்னை இருவிழியால் காண்கின்றோம்;
தரக்குறைவு காணாத தமிழ்க்குலத்தார் ஆட்சியிலே
சோழர்களும் பல்லவரும் சொக்கர்தங்கம் நிலம்யாவும்
வாழையடி வாழையென வாரிக் கொடுத்தார்கள்!
விலாத்துளைத்தே எதிரியினை வீழ்த்திநின்ற பெருவீரன்
குலோத்துங்கன் பலவேலி கொடுத்தான்இக் கோயிலுக்கே!
இங்குள்ள கோயில்அன்றோ இருந்திட்ட நிலைதன்னை
தங்குதடை இல்லாமல் சரிஉண்மை யாய்ச்சொன்னால்

வியப்பினிலே மூழ்கிடுவீர்! விடுகதையோ என்றிடுவீர்!
அயராதீர்! திருப்பணிக்கே ஆயிரம்பேர் இருந்தனராம்!
பொன்குவிந்து கிடந்ததிங்கே! பொலிவிளக்கு பலவகையாம்!
மண்வகையில் பலவேலி நிலம்மட்டும் இதற்குண்டாம்!
இவையெல்லாம் தள்ளுங்கள்; இருக்கிறது வேடிக்கை!
அவயவத்தில் துடிப்பேற்றி ஆடுகின்ற அழகியர்கள்
'தேவரடி யார்'என்ற திருப்பெயரில் இருந்தனராம்!
பூவை'சிவா னந்தவல்லி' 'பொன்னுமைகூ ரை'களென்போர்
எப்பற்றும் இல்லாத ஈடில்லா ஆண்டவர்க்கு
வைப்பாட்டியாக அன்று வாழ்ந்தனராம் வேடிக்கை!
கற்சிலையாய் வடிவெடுத்த கடவுளுக்கே அன்றிங்கே
பொற்சிலைபோல் வடிவெடுத்தோர் பொதுத்தொண்டு செய்தனராம்!
வேளைக்குப் பூசையுண்டு; விருந்துண்டு வருவோர்க்கு!
காளைகட்டும் கன்னியர்க்கும் காட்சியுண்டு விழாக்களிலே!
'பஞ்சாயத்து' என்றபெயர் பழையதொன்றே புதிதல்ல!
தஞ்சைபுகழ்ச் சோழர்களின் சரித்திரத்தை ஆராய்ந்தால்
ஊராட்சி மன்றிருந்த ஒப்பில்லா நிலைபுரியும்.
நேரில்லாப் பாகூரில் நிலைத்ததொரு மன்றத்தை
கல்வெட்டு விளக்கமுடன் கழறிடுமே இன்றைக்கும்.
இதுமட்டு மல்லஇங்கே இருந்தனவாம் பலவீதி;
அதிலொன்று 'பிருதிவி மாணிக்க' மென்பதுவாம்;
பல்லவன்நி ருபதுங்கன் பைங்காதற் கிள்ளையின்மேல்
எல்லையில்லாக் காதலுடன் இட்டானாம் அவள்பெயரை!
அத்தனையும் மறைந்ததடா! அவ்வளவும் இன்றில்லை!
இருந்தாலும் இன்றைக்கும் ஏர்ஓசை குன்றவில்லை!
விருந்தோம்பும் உயர்தமிழர் விரிந்தமனம் சுருங்கவில்லை!
தோப்புண்டு, குளமுண்டு, சோலையுண்டு, வயலுண்டு!
பூப்பெய்தும் இளமகளிர் புனல்தூக்கிச் செல்லுகின்ற

விழிபறிக்கும் காட்சியினை விளக்குதற்கே எங்கேசொல்?
பழிக்காதீர்! இப்பெண்டிர் 'பவுடர்'களை 'லிப்ஸ்டிக்'கை
கண்ணாலும் கண்டதில்லை! கட்டழகோ கொள்ளை! கொள்ளை!
தொண்ணூறு கதைநடக்கும் துரவடியே பட்டிமன்றம்!
மொத்தத்தில் ஒன்றுசொல்வேன் மூதூராம் இப்பாசூர்
பித்தக் கவிஞருக்கோ பிரியவொண்ணா விண்ணுலகம்!
வரலாற்றின் அறிஞருக்கோ மறக்கவொண்ணாப் பொருட் காட்சி!
நிரல்பட்ட கலைஞருக்கோ நெஞ்சினிக்கும் பழச்சோலை!
என்றுமட்டும் கூறிவிட்டு எழில்கண்டு சொல்கவென
நன்றியுடன் முடிக்கின்றேன் நான்.

**– திருப்பாசூர் கவிஞர் சுற்றுலாக் கவியரங்கக் கவிதை –**



# சென்னை

**அவையடக்கம்:**

தலைமைக்குப் பெருமை தந்த
        தமிழினப் பெரியோய்! சங்கப்
புலமையே உருவாய் வந்த
        புகழ்பூத்த அறிஞர் மக்காள்!
பலசுவை மிளிரும் போது
        பாவியேன் நானு மிங்கே
சிலநேரம் பாட வந்தேன்;
        சிறியேனைப் பொறுப்பீர் முன்னம்!

**சென்னை:**

என்னருமை இளந்தம்பி! தமிழ கத்தின்
        எழிலார்ந்த தலைநகரைக் காண வாராய்!
தென்னகத்தின் பெருநகரம்! தன்னை ஆண்ட
        'சென்னப்பன்' திருப்பெயரை விளக்கும் பேரூர்!
முன்னாளில் வெள்ளையனின் செயல்வண் ணத்தால்
        முன்னேற்றம் கண்டநகர்! மக்கள் ஆறோ
என்னாளும் வந்துபுகும் ஆழி போன்ற
        இரைச்சல்கொண்ட கடல்நகரம்! இதுதான் சென்னை!

கோட்டையுண்டு! கொடியுண்டு! வழக்க றிந்தோர்
        கூடுகின்ற மன்றமுண்டு! வண்டி ஓட்டும்
மாட்டைப்போல் இழுக்கின்ற மனிதர் உண்டு!
        மணலுக்கும் காற்றுக்கும் விலையுண் டீங்கே!
ஓட்டுகின்ற ஊர்திகளின் ஓலம் உண்டே!
        ஓயாமல் அலைந்துழைக்கும் மக்கள் உண்டு!
சேட்டுகட்குச் 'சௌகாரின் பேட்டை' உண்டு!

'சீனத்துப் பசார்'என்ற பெயரும் உண்டு!
இருந்தபெருந் தேர்தந்து 'கொடைமட'த்தால்
ஈடில்லாப் புகழ்பெற்றான் 'பாரி'! இன்றோ
இருக்கின்ற இடமெல்லாம் அயலார்க் கீந்த
எழிற்செயலால் 'பாரிமுனை' எனஒன் றுண்டே!
இருக்கின்ற கட்டடங்கள் எல்லாம் ஓங்கி
எட்டாத குன்றுகளாய் இருத்த லாலே
பொருத்தமுடன் 'மலைச்சாலை' எனஒன் றுண்டு.
போய்ப்பார்ப்போம்! புறப்பட்டே வாவா, தம்பி!

பாடல்பெற்ற 'மயிலார்ப்பூர்'! பட்ட மீயும்
பல்கலைக்க ழகமுடைய 'அல்லிக் கேணி!'
ஆடல்திரை ஆலிவுட்டாம் 'கோடம் பாக்கம்'!
அழகுக்கு 'மாம்பல'மாம்! சுருங்கா நெஞ்சால்
நாடிவந்தோர் துயர்துடைத்த தியாக ராயர்
நன்னகராம் 'தி.நகரம்'! 'எழும்பூர்'! மற்றும்
மாடியுள்ள வீடுநிறை 'அடையார்'! 'காந்தி'
மகானுக்கு நன்றிசொல்லும் 'நக'ரைக் காண்போம்!

உலகத்தில் இரண்டாவ திடத்தைப் பெற்ற
ஒயிலான கடற்கரையு முண்டு! காதம்
விலகிநின்று மூக்கடைத்தே ஓட வைக்கும்
மிகுநாற்றக் கூவமென்னும் ஆறு முண்டு!
பலர்சேர்ந்தே ஆராய்ந்து தமிழ் வளர்க்கும்
பைந்தமிழின் கழகங்கள் உண்டாம்! ஆனால்
சொலப்புகுந்தால் வெட்கமடா! தமிழைத் தீய்த்துச்
சுட்டெரிப்போர் தொகையுமுண்டு! சென்னை ஈது!

படித்தவனோ சோர்வுடனே இருக்கும் போது,
　　பதற்றமின்றி 'வெரிடைர்டு' என்று சொல்வான்!
படியாதான் சோர்வுடனே இருத்தல் கேட்டால்
　　பட்டென்று 'படாபேசார்' என்பான்! ஆனால்
அடியோடு இருவருமே 'களைப்'பென் கின்ற
　　அன்னைமொழித் தமிழினிலே பேச மாட்டார்!
கொடுமையடா கொடுமையிது! தமிழோ இங்கே
　　கூவத்தில் நீச்சலிடும்! என்ன செய்வோம்?

'வாழைபழ கடை'யென்றும் 'விர்க்கு' மென்றும்,
　　'மாயவர வெண்ணை'யென்றும், 'சிலவ்' என்றும்,
பீழையுடன் 'நாயிற்றுக் கிழமை' என்றும்,
　　பெண்ஆணை 'ஸ்திரீ'என்றும், 'புருஷர்' என்றும்,
பாழான மொழியினிலே விளம்ப ரங்கள்
　　பார்வையினை உறுத்துமடா! அவற்றைக் கண்டு
தாழாமல் தலைகவிழ்ந்து நடத்தல் வேண்டும்!
　　தலைநகராம் தமிழுக்கு; வெட்கம்! வெட்கம்!

புத்தகத்துக் காகிதத்தைத் தின்னும் மாடு;
　　பூமியின்மேல் மக்களையே இழுக்கும் மாக்கள்;
பொத்தல்இலைச் சோற்றுக்கு நாயி னோடு
　　போட்டியிடும் 'மன்னர்' குழாம்! வைக்கோல் போன்ற
செத்தையிட்டு மூடியதோற் கன்றால் பாலைத்
　　திருடுகின்ற கைகண்ட இடையர்! இன்னும்
எத்தனையோ வேடிக்கை நிகழும் மண்ணை
　　இதுவரைநீ காணாமல் இருத்தல் நன்றோ?

'ஊ'வென்ற சங்கின்ஒலி கேட்கும்; மக்கள்
உடனெழுந்து தொழிற்சாலை சேர்வார்! மற்றும்
'கூ'வென்ற குரலோசை கேட்கும்; பார்த்தால்
கூடையுடன் தயிர்க்காரன் நடந்து போவான்!
'பா'லென்ற இடியோசை கேட்கும்; முன்னால்
பாற்காரன் தலைப்பாகை யோடு நிற்பான்!
'ஏ'வென்றே ஒலிகேட்கும்; திரும்பிப் பார்த்தால்
இரைச்சலுடன் குதிரைவண்டி தாண்டிச்செல்லும்!

இருக்கின்ற கூந்தலினை வெட்டி விட்டே
எடுத்துவலை அணிந்துவரும் மாதர் உண்டாம்!
இருக்கின்ற மனிதரெலாம் நடக்க, நாயை
ஏற்றிசெலும் கார்உண்டாம்! களைத்து வந்தோர்
இருப்பதற்குத் திண்ணையற்ற வீடும், அண்டை
இருப்பவனைக் கொன்றாலும் வாளா யுள்ள
இரும்புமன மனிதர்களும் உண்டாம்! ஒன்றே
இல்லையடா 'ஈரநெஞ்சம்'! இதுதான் சென்னை!

பணம்விளையும் தாள்தோட்டம் 'வங்கி' உண்டு!
'பஞ்சாலை' மிகவுண்டு! சமுதா யத்தின்
குணக்கேடர்க் குரிய 'பள்ளி' 'சிறை'யும் உண்டு!
கோட்பாடு பலகொண்ட 'கட்சி' உண்டு!
மணம்பரப்பும் 'பூங்காக்கள்' உண்டு! சென்று
வானொலியின் பேரொலிபோய் விரட்டல் உண்டு!
கணப்போதில் விரையும்'வா னூர்தி' உண்டு!
காண்பதற்குப் பறந்தோடி உடனே வாவா!

சுழலுகின்ற 'கலங்கரையின் விளக்கம்'! காலச்
சுவடனைத்தும் உணர்த்தும்'தொல் காட்சி சாலை'!
அழல்வெயிலில் ஆறாகப் பாய்ந்தே ஓடி
ஆட்டுவிக்கும் தார்ச்சாலை! உயிர்கள் காட்சி!
பழிஒன்றாய்ப் பாவமொன்றாய் மாற்றி ஏழைப்
பாமரரை இழுத்தடிக்கும் நீதி மன்றம்!
எழுத்தாலே பரபரப்பை வளர்க்கும் செய்தி
இதழ்குவிந்த நகரமடா! இதுதான் சென்னை!

அன்றொருநாள் தோளுயர்த்தி பகையை வீழ்த்த
ஆர்த்தெழுந்த தமிழர்கதை கேட்டி ருப்பாய்!
இன்றிங்கே திரையரங்கின் முன்னால் தங்கள்
எழில்வலிமை காட்டுவதைக் காண வாராய்!
அன்றொருநாள் யார்வலியோர் என்று காட்ட
அமைந்தபெரும் போர்க்களங்கள் படித்தி ருப்பாய்!
இன்றிங்கே உந்துவண்டி நிலையம் சென்றால்
எவர்வலியோர் எனக்கூறும் களத்தைக் காண்பாய்!

பறக்கின்ற பறவைகளும் இனத்தோ டொன்றிப்
பகிர்ந்துண்டு பசியாறி உறங்கும்! காரில்
பறக்கின்ற 'செல்வ'ரென்றும் அவரை ஏங்கிப்
பார்க்கின்ற 'நடைபாதை' மனிதர் என்றும்
சிறப்பிழந்த வேற்றுமையைக் காட்டும் சென்னை
சிலருக்கே 'சிங்கார நகரம்'! வாழ்வை
வெறுப்பவர்க்கோ 'சீர்கெட்ட நரகம்'! மேலும்
வேறென்ன நான்சொல்வேன்? காண வாராய்!

**- திருப்பாலைவனக் கவிஞர் சுற்றுலாக் கவியரங்கக் கவிதை -**



# கூப்பிடு மாலையை!

**மாலை வந்ததா? – தோழி**
**மயக்கம் கொணர்ந்ததா?**

சோலை உடலெலாம் சுடர்த்தங்கம் வேய்ந்திட
சுந்தரப் பூங்குயில் தூதினை இசைத்திட
பாலைப் பழித்திடும் படர்முல்லை சிரித்திட
பக்கம்பக் கம்வந்தே நறுந்தென்றல் தழுவிட

**மாலை வந்ததா? – தோழி**
**மயக்கம் கொணர்ந்ததா?**

இருட்டு மங்கையை இழுத்திங்கே வந்திட
எழில்வான அகல்களை ஏற்றி நடந்திட
திரட்டிய உணர்வலை தேங்காமல் பாய்ந்திட
திரும்பத்தி ரும்பக்கதை சீராகத் தொடர்ந்திட

**மாலை வந்ததா? – தோழி**
**மயக்கம் கொணர்ந்ததா?**

விரும்பிடும் செழுங்காளை உறவாட வந்திட
விழிவி ருந்துகள் இடம்மாறி நடந்திட
கரும்புச் சுனைஇதழ்க் கானாற்றில் மூழ்கிட
காலைவ ரும்வரை ஞாலம் மறந்திட

**மாலை வந்ததா? – தோழி**
**மயக்கம் கொணர்ந்ததா?**

வேப்பிலை யொத்தஎன் விழிப்பசி நீங்கிட
வேகுமென் பாழ்நெஞ்சில் வெண்பனி பெய்திட
தோப்புப்பூ ஊஞ்சலும் சுழன்றாடிக் களைத்திட
தொட்டவன் தோள்களில் தொத்திக் கலந்திட

**மாலை வந்ததா? – தோழி**
**மயக்கம் கொணர்ந்ததா?**

# கல்லறைக் காதலிக்கு



நெஞ்சமே! உயிரே! ஊனே!
    நெடுந்துயில் அணைத்துக் கொண்ட
வஞ்சியே! மீண்டு மிங்கே
    'வா'என்றால் வரமாட் டாயா?
பஞ்சுடல் வடிவ மெங்கே?
    பாதத்தின் நெளிவு மெங்கே?
அஞ்சுக மொழிகள் எங்கே?
    அன்னமே! எங்கே சென்றாய்?

நினைத்தாலே புதிய இன்பம்;
    நெருடினால் பிறிதோர் இன்பம்!
தினைக்காட்டுக் கிள்ளை யைப்போல்
    தேன்மொழி வருவாய்! என்றன்
மனக்காட்டைச் செழிக்க வைக்கும்
    மழைஎன்பேன்: அமுதம் என்பேன்.
எனைத்தூக்கி நெருப்பில் வீசி
    எங்கேநீ பறந்து போனாய்?

அழகெலாம் அள்ளி வந்தே
    அளித்திட்டாய்; உரித்தி டாத
பழச்சுளை இதழில் தாவிப்
    பசிநீக்கிக் கொண்டேன்! இன்னும்
விழிச்செம்மை மாற வில்லை;
    வினைகண்ட இதழின் ஈரம்
அழியவே இல்லை யென்றால்
    அதற்குள்நீ எங்கே போனாய்?

கோடைக்கே 'இளநீர்' ஆனாய்!
குளிருக்குப் 'போர்வை' ஆனாய்!
மேடைக்கு மயிலாய் ஆனாய்!
விழிக்குநீ விருந்தாய் ஆனாய்!
ஓடைக்கே ஓசை யானாய்!
உயிருக்குள் உயிராய் ஆனாய்!
பாடைக்குப் பொருளா னாயோ?
பாவையே! என்ன செய்வேன்?

இருகுடம் போதா தென்றே
இடையிலோர் குடத்தைத் தூக்கி
அருகுள்ள ஆற்றை நோக்கி
அன்பே! நீ வருவாய்; நானும்
செருகிய விழியை வாங்கத்
திணறுவேன். இன்றோ என்னைச்
சருகாக்கிக் காற்றில் வீசித்
தனிவழி நடந்தா சென்றாய்?

காதல்நற் பரிசல் ஏறிக்
கானாற்றில் பயணம் செய்தோம்;
வேதனைச் சுழலில் என்னை
விட்டெறிந் தெங்கே போனாய்?
சீதத்தை உமிழும் உன்றன்
சீர்விழி எங்கே? சென்ற
நாதத்தின் சுவடு மெங்கே?
நானெங்கே? உலகில் இங்கே!

ஏடாக இருந்தாய்; நானும்
        ஏழுத்தாணி யாகி நின்றேன்;
ஏடிங்கே இல்லை யென்றால்
        எழுத்தாணிக் கேது வேலை?
ஈடிலாக் குளமாய் ஆனாய்;
        எடுப்பான வாளை யானேன்;
ஈடற்ற குளமோ வற்றி
        இருண்டது; எங்கே வாழ்வேன்?

செவ்வாழை உடலம் எங்கே?
        சேலாடும் விழிகள் எங்கே?
'எவ்விதம் தாங்கும், ஐயோ!'
        எனச்சொல்லும் இடைதான் எங்கே?
இவ்வள வேஎன் றில்லா
        இதழூறும் தேனா றெங்கே?
கவ்விய செவ்வாய் இங்கே;
        கனியான உதடும் எங்கே?

தும்பைப்பூச் சேலை ஆட
        துடிக்கின்ற விழிகள் ஆட
கம்புசேர் கொல்லை நோக்கிக்
        கன்னல்நீ வருவாய்; நானும்
அம்புலி கண்டே தாவும்
        அலையெனத் தாவி நிற்பேன்.
நம்பவே முடிய வில்லை;
        நடுக்காட்டில் விட்டா போனாய்?

அருகேநீ வருவாய்; என்றன
அணுவெலாம் ஆட்டம் போடும்!
பருகிடத் தருவாய்; மின்னல்
பாய்ந்திடும் உடலில்! 'தொட்டாற்
சுருங்கும்புல்' மெத்தை யாகும்;
சூழ்புதர் திரையாய் ஆகும்;
எரிமின்மி னியின்வி ளக்கில்
இரவெலாம் 'கதை'ந டக்கும்!

வானத்து நிலவோ தேய்ந்து
வளர்வதால், பறந்தே அங்கு
போனாயோ மாற்றாய் நிற்க
பொன்பூத்த நிலவே! பொய்நீ
'ஏனத்தான், அத்தான்' என்றே
எழில்கூட்டிச் சிரிக்கின் றாயோ?
சீனத்துச் சிலையே! உன்றன்
சீர்வழி தொடர்கின் றேன்நான்!

ஞாலத்தில் சொர்க்கம் தன்னை
நாம்கூடி அமைப்போம் என்றாய்;
காலனின் அழைப்பை ஏற்றுக்
கடந்ததேன்? புலம்பும் என்றன்
ஓலத்தைக் கேட்ப தற்கும்
உயிரேநீ அருகில் இல்லை.
**பாலந்தான் இறப்பே என்றால்**
**பாவிநான் பிணமா கின்றேன்!**



# சொல்லேன், தோழி!

நேற்றுவரை அவனுடனே திரிந்தேன்; காய்த்த
நெடுமரத்தின் கொய்யாவைப் பறிப்பான்; பின்னர்
மாற்றியதை இருவருமே கடித்துத் தின்போம்;
மறவாமல் பள்ளிக்குக் கூடிச் செல்வோம்;
ஆற்றினிலே குதித்திடுவோம்; மகிழ்வோம்; ஆனால்
அவற்றையெல்லாம் தடுக்கவில்லை இன்று மட்டும்
மாற்றமென்ன, தடுத்தாரே? அரும்பு நானும்
**'மல'**ராகி விட்டேனாம்; **பொருளென் தோழி?**

கையோடு கைசேர்த்தே நடப்போம்; பூத்த
காவெல்லாம் சுற்றிடுவோம்; கிள்ளி விட்டு
'ஐய்யய்யோ!' என்றென்னை அலறச் செய்வான்;
அழுதிடுவேன்; 'அழவேண்டாம்' என்பான்; நானும்
பொய்க்கோபம் காட்டிடுவேன்; சுழன்று வந்து
புதுமகிழ்ச்சி சேர்த்திடுவான்; என்றால் இன்றோ
அய்யாவும் அம்மாவும் தடுத்தார். நானும்
**'அலர்ந்து'** விட்டேன் என்கின்றார்; **பொருளென் தோழி?**

பொங்கிவரும் வெள்ளிநிலா வானக் காட்டில்
பூத்துவிட்டால் உள்ளமெல்லாம் மகிழ்வோம்; செந்நெற்
பொங்கலிட்டு நிலாவமுது படைப்போம்; நெஞ்சம்
பூரிக்க உண்டிடுவோம்; செழித்தி ருக்கும்
செங்கரும்பை இருமுனையும் இருவர் சேர்ந்து
தின்றாலே தித்திக்கும் என்றால், இன்றோ
'அங்கென்ன வேலை'யென்று தடுத்தார்! நானும்
**'ஆ'**ளாகி விட்டேனாம், **பொருளென் தோழி?**

ஆடிவரும் காற்றுக்குப் போட்டி யாக
        ஆடிடுவோம் ஊரெல்லாம்; நிலவு காயும்
மாடியின்மேல் மணிக்கணக்கில் கதைகள் பேசி
        மகிழ்ந்திடுவோம்; எழிலார்ந்த பூங்கா தன்னில்
கூடிடுவோம்; மலர்பறிப்பான்; சூடிக் கொள்வேன்!
        கொடுமைஇது, மிகக்கொடுமை! இன்று மட்டும்
'போடி அங்கே, உள்ளேபோ,' என்றார்! நானும்
        **'பூ'**வாகி, விட்டேனாம், **பொருளென் தோழி?**

# சாவு தேவை



அன்பூறும் மனக்குளத்தை வற்ற விட்டே
ஆசையெலாம் பாழடித்து மறைந்தாய் பெண்ணே!
துன்பத்தின் முகடேற்றி எனைம றந்து
தொலைதூரம் நடந்துவிட்டாய்! 'இன்பம் எங்கே?
பொன்பூக்கும் உதடெங்கே? இதழ விழ்ந்த
பூச்சிரிப்பில் சுழிதோன்றும் கன்னம் எங்கே?
மின்பூக்கும் இடைஎங்கே?' என்று வாட்டும்
விழிகளுக்கே ஓய்வுதர **அனுப்பு சாவை!**

இடையினிலே குடமெடுத்து, குறும்பெ டுத்த
இதழ்க்கடையில் சிரிப்பெடுத்து வருவாய்! நானும்
மடையெடுத்த நீராவேன்! நிற்க மாட்டாய்!
வாளெடுத்த விழிகாட்டி மிரட்டிச் செல்வாய்!
படையெடுத்த வீரனல்ல என்பேன்! நானும்
பகலவனாய் மாறிடுவேன்! பனியாய் ஆவாய்!
விடையெடுத்துக் கூறாத புதிராய் ஆனாய்!
வெந்தணலில் தவமெதற்கு? **அனுப்பு சாவை!**

அன்றொருநாள் நடுப்பகலில் ஓடை யோரம்
ஆலமர வேர்மீது அமர்ந்தி ருந்தேன்;
அன்றிலைப்போல் ஓடிவந்தாய்! வேடன் ஆனேன்!
ஆசைக்குத் தாழ்இன்றிப் பற்ற வந்தேன்!
'நின்றிடுவீர்! முத்த'னென்றாய்! பதறி விட்டேன்!
நிமிர்ந்தவுடன் முத்தனென்னும் எருதைக் கண்டேன்!
தென்றலைப்போல் நீபறந்தாய்! கனவில் வீழ்ந்தேன்!
திரும்பவும்நீ வரமாட்டாய்! **அனுப்பு சாவை!**

மற்றொருநாள் இளங்காலை பூஞ்சோ லைக்குள்
மலர்ச்செடிக்கு நீர்ஊட்டப் புகுந்தாய்! நானும்
பற்றுதற்குத் தும்பியைப்போல் வந்தேன்! ''ஐயோ!
பாம்''பென்றாய்! திடுக்கிட்டு நின்றேன்; அங்கே
புற்றெடுத்த பாம்பில்லை; 'தாம்பு' கண்டேன்!
பொற்காசின் ஓசையினை எழுப்பிச் சென்றாய்!
சிற்றெறும்பாய்ச் சுற்றிவந்தேன்! இரங்க வில்லை!
திசைமாற்ற விரைவினிலே **அனுப்பு சாவை!**

பின்னொருநாள் மாலையிலே கழனி நோக்கிப்
பெண்மயிலே! நீநடந்தாய்! ஆர்வத் தோடே
உன்னடியைப் பின்தொடர்ந்தேன்! நின்றாய்! என்றன்
உள்ளத்தை விரித்துவைத்தேன்! சிரித்தாய்! பின்னர்
தின்பதற்குத் தேமாங்காய் தேவை என்றாய்;
தேனடையே! மரமீது தாவிச் சென்றேன்!
மின்னலைப்போல் நீயானாய்! மயங்கி வீழ்ந்தேன்!
வேரின்றி மரமுண்டோ? **அனுப்பு சாவை!**

எதைநினைப்பேன்? எதைமறப்பேன்? விழிய ரங்கில்
எத்தனைநாள் நிழலாட்டம்? போதும், போதும்!
சதைவேறாய், உயிர்வேறாய் வாழா தென்னும்
சரித்திரத்தை மாற்றாதே, வெட்கக் கேடு!
விதைமுளைக்க மழைவேண்டும்; ஆனால் நீயோ
வெறுங்கானல்! பெருங்கள்ளி! வரவே மாட்டாய்!
கதைபேசல் இனிஎதற்கு? முடிந்த தெல்லாம்
காதலியே! கெஞ்சுகிறேன், **அனுப்பு சாவை!**



# எனக்கென்ன வேலை?

பூங்காவில் மின்னலாய் வந்தாய் - உன்
பொலிவான எழில்காட்டி விழிஇன்பம் தந்தாய்!
மாங்கனி இதழ்களால் தொட்டாய் - ஆனால்
மறுகணம் சொல்லாமல் பறந்தாயே சிட்டாய்!
நீங்காதே என்றேனே உன்னை - எனின்
நெருப்பினில் தள்ளிஏன் பிரிந்தாயோ என்னை?
வாங்கொணா வைரமே! வாராய்! - நான்
வையத்தில் வாழ்வதா? முடிவிங்கு தாராய்!

இனிக்கின்ற நீபொதிகைத் தென்றல் - கண்ணே!
இணங்காயோ? இன்றேநாம் முடிப்போமே மன்றல்!
பனிக்காதல் பார்வையால் வென்றாய்! - பின்னர்
பைத்தியம் ஆக்கிஏன் எனைக்கொல்லு கின்றாய்?
புனலாடித் தலைஆற்றி இருந்தாய்! - என்றன்
புண்நெஞ்சின் துயர்ஆற்ற உயிரேஏன் மறந்தாய்?
அனல்கண்ட புழுவானேன் கனியே! - உடன்
அடுத்தடியை எடுத்துவை; பொறுத்திடேன் இனியே!

வாழ்வில்நீ இசைசேர்க்கும் வீணை - ஆனால்
வரவில்லை என்றாலோ நானில்லை, ஆணை!
வாழ்வில்நீ தெவிட்டாத செந்தேன் - ஆனால்
மணவாழ்வு இல்லையேல் சாக்காடு வந்தேன்!
வாழ்வில்நீ மணம்சேர்க்கும் முல்லை - ஆனால்
மறந்தாலோ செல்லுவேன் இடுகாட்டின் எல்லை!
வாழ்வில்நீ நிழல்சேர்க்கும் சோலை - ஆனால்
**மறுத்தாலோ வையத்தில் எனக்கென்ன வேலை?**



# நானும் நீயும்

தறிகெட்டு ஓடுகின்ற முகிலே! நீஏன்
        சடுதியிலே விரைகின்றாய் அமைதி யின்றி!
பறிகொடுத்தேன் அவளிடத்தில் உயிரை, நெஞ்சை
        பைங்காதல் கனிவதற்குள் மறைந்தாள்! முன்பின்
அறியாத ஒருவன்கைச் செல்வ மானாள்!
        அறிந்தபின்னால் அலைகின்றேன்! ஆனால் நீஏன்
வெறிபிடித்த பேயைப்போல் ஓடு கின்றாய்?
        வேதனைஏன்? வெண்முகிலே! **எனக்குச் சொல்லேன்!**

சரம்போல விழிநீரை உதிர்க்கும் வானத்
        தண்முகிலே! காரணமேன்? விளக்கு வாயா?
கரந்தொட்டு மெய்யுணர்ச்சி சேர்த்த தெல்லாம்
        கனிஇதழ்கள் பரிமாறிக் கொண்ட தெல்லாம்
மறந்துவிட்டுப் பிரிந்துவிட்டாள்! என்றன் கண்கள்
        மலையருவி யாகிவிட்ட திந்நாள்; ஆனால்
திறம்படைத்த கருமுகிலே! நீஏன் அங்கே
        சிந்துகின்றாய் கண்ணீரை? **எனக்குச் சொல்லேன்!**

குமுறுகின்ற மழைமுகிலே! வாழ்வில் என்ன
        கொடுமையினைச் சந்தித்தாய் அழுவ தற்கு?
''நமைப்போலே ஒருமித்த இன்பங் கண்டோர்
        நானிலத்தில் பிறந்ததிலை, அன்பே!'' என்று
தமிழாலே கொஞ்சிடுவாள்! மயக்கங் கொள்வேன்!
        தையலவள் அயல்விட்டான் விளக்காய் ஆனாள்!
குமுறுகின்றேன்! தேம்புகின்றேன்! ஆனால் நீஏன்
        குலைநடுங்க அலறுகின்றாய்? **எனக்குச் சொல்லேன்!**

காற்றடிக்க முன்ஓடும் முகிலே! நீஏன்
    கால்போன வழிஓடும் கோழை யானாய்?
நேற்றுவரை நிழலானாள்! நெஞ்ச மானாள்!
    நிம்மதிக்குப் பொருளானாள்! ஆனால் இன்றோ
ஆற்றவொணா நெருப்புலையில் எறிந்து விட்டே
    அடுத்தவன்கைப் பொருளானாள்! எனவே நானும்
காற்றடிக்கும் திசைநோக்கி ஓடு கின்றேன்!
    கவின்முகிலே! உன்செயல்ஏன்? **எனக்குச் சொல்லேன்!**

# பாழ்வழக்கம்



'கீச்'சென்றே குரலெழுப்பும் கிளியே! எங்கள்
கேடுகெட்ட சமுதாய வழக்கைக் கேளாய்!
சேச்சேச்சே! உங்களிடம் துளியும் காணோம்;
தித்திக்கும் மணவாழ்வில் தடையும் உண்டா?
ஈச்சமர நிழலைப்போல் மாறும் எங்கள்
இதயமற்ற சமுதாயப் போக்கை, நாளும்
பூச்செண்டு மங்கையரின் வாழ்வைத் தீய்த்துப்
பொடியாக்கும் கதையைக்கேட் டிருக்க மாட்டாய்!

காதலென்பார், உரிமையென்பார், கற்பாம் என்பார்;
காலமெலாம் பெண்பெருமை பேசித் தீர்ப்பார்!
காதலெனும் பூக்காட்டில் ஆண்கள் மட்டும்
காட்டாட்சி புரிவதற்கே வழிகள் செய்வார்!
மாதர்களில் பலபேரைக் காத லித்து
மணம்சுவைக்க உரிமையுண்டாம்! பெண்டிர் இந்தப்
பாதையிலே அடிவைத்தால் **'கணிகை'** என்பார்!
பட்டமென்றும் காளைக்குக் **'கணிகன்'** இல்லை!

இலைநிழலில் காதல்செயும் கிளியே! உங்கள்
இனத்தினிலே மணத்துறையில் பேதம் ஏது?
நிலைபெற்ற மனைவியினை இழந்தால் ஆணும்
நிம்மதிக்கே ஒருத்தியினை மணக்க லாமாம்!
சிலைபோன்ற பெண்ணுக்குக் கணவன் போனால்
திருமணமே கூடாதாம்! துணிந்து மற்றோர்
தலைவனையே அவள்கொண்டால் **'வேசி'** என்பார்!
தரங்கெட்ட ஆண்**'வேசன்'** ஆவ தில்லை!

'உணர்ச்சியெனில் இருவருக்கும் ஒன்றே' யென்றே
ஒப்புகின்றார்! ஆனாலும் ஆண்கள் மட்டும்
அணங்குகளை அடுக்கடுக்காய் மணக்க லாமாம்!
அணுவளவு பிறழ்ந்தாலும் பெண்டிர் தம்மைப்
பிணத்திற்கே ஒப்பாக்கி **'விலைமா'**தென்று
பேசாத சொற்களினால் வதைப்பார்! சேச்சே!
பணங்கொடுத்துக் கற்பைவிலை வாங்கும் ஆணோ
பாழ்நாட்டில் **'விலைமனிதன்'** ஆவ தில்லை!

'காதல்ஒரு தேனாறே! அதன்கண் மூழ்கிக்
கலத்தல்ஒரு பேரின்பம்', என்பார்! ஆனால்
காதலனாம் ஒருவனுக்குச் சமுதா யத்தில்
காதலிகள் பலரிருக்கத் தடையே யில்லை!
காதல்செயும் மங்கை,அவன் சுவட்டில் சென்றால்
கல்லெறிந்து **'விபசாரி'** என்றே சொல்வார்!
வேதனையை என்சொல்வேன்? கிளியே! ஆணை
**'விபசாரன்'** என்றழைக்க நாதி ஏது?



# தாலி

மங்கையவள் 'மனையரசி'யானாள் என்ற
மாற்றத்தின் முத்திரையாம் தாலி! மேலும்
இங்கொருவன் 'கருவூலம்' என்று கூறும்
எழுதாத 'முறிச்சீட்'டாம் தாலி! வீட்டில்
தங்காத கன்னியர்க்குத் 'தாம்'பாம் தாலி!
தனிமனிதன் உடைமைக்குப் 'பூட்'டாம் **தாலி!**
வெங்கொடுமைக் காமுகர்க்குத் 'தீ'யாம் தாலி!
வெறிப்பார்வைக் குறும்பருக்கோ 'பாம்'பாம் தாலி!

பூட்டுக்கே உரியவன்தான் வீட்டுக் காரன்;
பொன்வண்ணக் கயிறணிந்தோன் சொந்தக் காரன்!
ஆட்டுகின்ற வகையிலெலாம் ஆட்டி வைத்தே
அடங்கென்றே அடக்குகின்ற 'மகுடி'தாலி!
பூட்டுமுன்னர் அவள்பெயரோ 'கன்னி'; இந்தப்
பூட்டறுந்தால் அவள்பெயரோ 'விதவை'! அன்புக்
கூட்டுக்கே பாலமென்பார் தாலி தன்னை!
குங்குமம், பூ, மஞ்சள்தரும் 'வள்ளல்' என்பார்!

கட்டுபவன் 'தீய'னென்றால் இதுதான் தூக்கு;
கட்டுபவன் 'தூய'னென்றால் இதுதான் மாலை!
சிட்டுகளும் இணைஇணையாய் வாழும்; ஆனால்
திருமணத்தில் தாலிகட்டி வாழ்வ துண்டா?
கட்டுடைய பிடியோடு களிறும் வாழும்;
கழுத்தினிலே தாலிபின்னி வாழ்வ துண்டா?
திட்டமிட்ட இல்வாழ்வில் 'அன்பு'தேவை;
சிந்தித்தால் 'முழக்கயிறு'தேவை தானா?

களவியலில் கருவுற்றாள் மங்கை யென்றே
கண்டவர்கள் 'அலர்தூற்றும்'வேளை வந்தே,
'உளராதீர்!' எனத்தடுத்து விழிநீர் போக்கும்
ஒப்பற்ற நீதிபதி இதுதான் என்பார்!
கிளைமுறிந்தால் மரம்வீழ்தல் உண்டா? ஆனால்
**கேடுகெட்ட நாட்டகத்தே கணவன் போனால்**
**களைந்தெறிவார் தாலியினை; 'விதவை' என்பார்!**
**கணவனுடன் அவள்உணர்ச்சி செத்தா போகும்?**



# இதுதான் சமுதாயம்

இடிஇடிக்க, மழைமுகில்கள் கூட, வெள்ளி
　　இழைஇழையாய்த் தூறல்விழ, ஆறாய் மாறி
கடகடென நுரைக்கடலில் கலப்பதைப்போல்
　　காசினியில் பிறக்கின்றார்! வாழு கின்றார்!
தடதடென ஓடுகின்றார்! கால மெல்லாம்
　　சதைநோக உழைக்கின்றார்! பழுத்த பின்பு
சடசடென மறைகின்றார்! இதுதான் 'மக்கள்
　　சமுதாயம்', 'வாழ்க்கை'யென்று சொன்னார்! மெய்யா?

'சமுதாயம், சமுதாயம்' என்று நூறு
　　சாற்றுவதைப் பார்க்கின்றோம்! ஆனால் இன்றைச்
சமுதாயத் தின்உருவை, முழுத்தோற் றத்தைச்
　　சரியாகச் சொன்னவர்யார், இதுவ ரைக்கும்?
'சமுதாயம் உருவமில்லா வழக்கு மன்றம்;
　　சரீரமில்லா நீதிபதி' என்றே இந்தச்
சமுதாய இலக்கணத்தைச் சொல்வ தானால்
　　சரிபாதி உண்மையுண்டு; முழுதும் இல்லை!

காலமெனும் கொடிமரத்தை நிறுத்திக் காட்டி,
　　கால்வலிக்க ஓடவிட்டு, 'விதி'யின் பேரால்
ஏலம்வைத்து, 'அதிர்ஷ்ட'மெனும் பரிசைச் சொல்லி
　　இளிச்சவாய் மனிதர்களைப் போட்டி மண்ணில்
ஓலமிட வைக்கின்ற பேய்தான் என்றும்
　　உதவாத சமுதாயம்! அடடா! ஈதோ
ஞாலத்தில் ஆட்டிவைக்கும் பூதம்! இஃதை
　　நம்பியவர் நிம்மதியாய் வாழ்ந்த துண்டா?

கண்ணுக்கு நேரிடையாய்த் தெரியும் ஒன்றைக்
கதையாக்கும்! பொய்யாக்கும்! மறைக்கும்! தீயோர்
எண்ணத்தில் எழுகின்ற கற்ப னைக்கும்
எழிலார்ந்த உருசமைக்கும்; உலவ வைக்கும்!
சுண்ணத்தில் இடுகின்ற மஞ்ச ளைப்போல்
தூயபல செய்திகளின் உருவம் மாற்றும்!
விண்ணுக்கே உயர்த்துமடா பணிந்தால்! இன்றேல்
விழித்துஎழாப் பிணமாக்கி மண்ணில் சேர்க்கும்!

தீட்டாத சட்டத்தால் மக்கள் தம்மைத்
தினந்தினமும் ஆட்டிவைக்கும்! இதன்ஆட் டத்தால்
ஒட்டாண்டி யானவர்கள் பலபேர்; காவி
உடுத்துமனை துறந்தவர்கள் பலபேர்! இந்தச்
சீட்டாட்டத் தால்பலபேர் மன்ன ரானார்;
சிதைந்தொழிந்தார் வேறுபலர்! சமுதா யத்தின்
காட்டாட்சி புரியவில்லை; ஓய வில்லை!
காற்றாட்சி வான்வெளியில் ஓய்வ தேது?

சிரிப்பவரை அழவைக்கும் 'குரங்கு'! ஆழ்ந்த
சிந்தனையைப் 'பித்'தென்று சொல்லும் 'பொய்மை'!
தரித்திரர்கள், செல்வந்தர் என்றே இங்கே
தனித்தனியே சாதிகளைப் படைக்கும் 'பூதம்'!
நரிகளுக்கும் ஓநாய்க்கும் 'தரும கர்த்தா'!
நல்லவர்க்கும் சான்றோர்க்கும் 'சிலந்திக் கூடு'!
புரிந்துகொளா மனிதனிதன் கரத்தில் 'சின்னப்
புல்பூண்'டே! இதையறியான் வாழ்வ தில்லை!

உதைக்கின்ற கால்களுக்கே அணிகள் பூட்டும்!
ஒட்டவரும் உதட்டுக்கோ நஞ்சை ஊட்டும்!
மதுகுடித்த மந்தியைப்போல் பெண்கள் பற்றி
வாய்மாற்றிப் பேசுமடா! ஒருநாள், 'மெத்தைப்
பதுமைக'ளே மாதரென்று அடித்துக் கூறும்;
பாவையர்கள் 'மண்ணகத்தின் விழிகள்' என்றே
அதைமறுத்து மொழியுமடா, மறுநாள்! இந்த
அரைமூளைச் சமுதாயம் **'கிறுக்கின் தோற்றம்'!**



# தாகூர் அஞ்சலி

கவிவானில் சுடர்வீசும் நிலவே! ஓடும்
காலத்தை வென்றுவிட்ட ஆற்றல் மன்னா!
புவிக்கெமையே உன்கவியால் அறியச் செய்தாய்;
புல்லுக்கும் கல்லுக்கும் கவிதை நெய்தாய்!
தெவிட்டாத இலக்கியத்தால் பலாவை, தேனை
'சீ'யென்றே வெறுக்கவைத்தாய்! உலகில் வாழும்
கவிக்குலத்தின் பேரரசன் நீயே! நெஞ்சக்
கற்பனைக்கு நாற்றுவிட்ட முதல்வன் நீயே!

புதுமையிலும் மிகப்புதுமை; பதினோ ராண்டுப்
பூவயதில் எழிற்கவிதை வடித்தா யாமே!
அதுகூட விந்தையல்ல; பள்ளி தன்னை
'அந்தமான் சிறை'யென்றே வெறுத்தா யாமே!
'நதியோட்டம், வயற்காடு, அருவி, குன்றம்,
நகைக்கின்ற மலர்ச்சோலை, கயல்கள் தாவிக்
குதிக்கின்ற ஏரி'இவை பள்ளி யென்றே
கூறியங்கே பொழுதெல்லாம் கழித்தா யாமே!

கடவுளினை உழைப்பாளர் மார்பில் சிந்தும்
கடும்வியர்வைத் துளியினிலே கண்டு சொன்னாய்!
உடல்புதைத்த மயானத்தின் பெருமை தன்னை
உளம்சிலிர்க்க நீயெடுத்துத் தொடுத்துச் சொன்னாய்!
கடல்போன்ற விரிந்தமனம் தேவை யென்றாய்!
கடுகுஉள்ளம், தினைஉள்ளம் வேண்டாம் என்றாய்!
அடடாவோ! பகுத்தறிவின் தந்தை நீதான்;
ஆண்டவன்தான் கல்லினிலே இலையென் றாயே!

குயிலுக்கும் மயிலுக்கும் தோழன் ஆனாய்!
கொஞ்சுகின்ற பூக்களுக்குத் துணைவன் ஆனாய்!
உயிர்குடிக்கும் உலகப்போர் கண்டு, செந்தீ
உலைவிழுந்த புழுவைப்போல் துடித்தாய்! கட்டித்
தயிர்க்கடையும் மத்தைப்போல் இருந்த 'செர்மன்'
தலைக்கிறுக்கைக் கவிதையினால் சாடி நின்றாய்!
மயிர்க்கவரி மானைப்போல், வெள்ளைக் காரன்
வழங்கியதோர் 'சர்'பட்டம் வேண்டாம் என்றாய்!

சாகாத **'கீதாஞ்சலி'**யினால் நாட்டுச்
சரித்திரத்தில் புதுத்திருப்பம் காணச் செய்தாய்!
போகாத நெஞ்சமெலாம் புகுந்தாய்! கூடிப்
புகழாரம் சூட்டினரே 'வெல்சு'ம், 'ஷா'வும்!
'ஆகா'வென் றுன்எழுத்தைப் போற்ற வந்தோர்
ஆதியிலே நீவடித்துத் தந்த பாட்டை
'வேகாத சோ'றென்றே பழித்தா ராமே;
வித்தகனே! அதைக்கண்டு சிரித்தா யாமே!

ஆங்கிலத்தின் பித்தத்தால் இங்கே உள்ளோர்
அம்மொழியில் கவிபாட ஓடும் போது,
'மாங்குயில்தான் கிளிக்குரலில் பாடப் போனால்
வாதையப்பா கேட்பவர்க்கே!' என்றாய்! நெஞ்சில்
தூங்கிவிட்ட தாய்மொழியின் உணர்வை மீண்டும்
தொட்டெழுப்பி நிற்கவைத்தாய்! அமைதி வாழும்
பூங்காட்டில் சோலைகளின் இடையே தூய
புதுமைநிறைச் **'சாந்திநிகேதன'**த்தைக் கண்டாய்!

அருவியைப்போல் வெண்தாடி; கிளர்ச்சிக் கண்கள்;
அறிவெல்லாம் போயுறங்கும் அழகு நெற்றி;
உருகவைக்கும் கவிதோய்ந்த ஊற்று நெஞ்சம்;
உரிமைக்கே போராடும் திண்மைப் போக்கு;
சருகிடமும் புழுவிடமும் பாடம் கேட்கும்
தனிப்பண்பு; வெண்மையுடை; குடிசை வாழ்க்கை!
அருகிருந்த மாக்கவிஞ! எங்கே சென்றாய்?
**அழுதாலும் மீண்டுமிங்கே வரமாட் டாயா?**

**(1962 ஆம் ஆண்டு தாகூர் நூற்றாண்டு விழாப் போட்டியில் முதற்பரிசுப் பதக்கம் பெற்ற கவிதை).**

# அறிஞர் அண்ணா



நெற்றியில் அறிவைத் தேக்கி,
நெஞ்சத்தில் வீரம் தேக்கி,
வற்றாத நாவில் நாளும்
வளமூறும் கருத்தைத் தேக்கி,
சுற்றாமல் சுற்றும் கண்ணில்
துடிப்பினைத் தேக்கி, மண்ணில்
கற்றவர் திகைக்கும் வண்ணம்
காண்பவர் ஒருவர் **அண்ணா!**

'ஆரடா, தாழ்ந்தோன்?' என்றே
ஆரிய மாயைப் போக்கை
வேரொடு துணித்தார்; வெற்றி
வித்தினை இட்டார்; மானப்
போருக்குத் தலைமை தாங்கிப்
புறப்பட்டார்; இந்த நாட்டில்
'நேரு'வின் நேராய் நின்றார்;
நெகிழாத புகழைச் சேர்த்தார்!

இவரைப்போல் தலைவர் நாட்டில்
இதுவரை பிறந்த தில்லை;
இவரைப்போல் தலைவர் நாட்டில்
இனிமேலும் பிறக்க மாட்டார்!
இவர்தானே 'திராவி ட'த்தின்
எழுச்சிக்கு 'வால்டேர்'! சொன்னால்
இவர்தானே வைதீ கத்தை
எதிர்த்திட்ட 'எமிலி சோலா'!

என்னாடு வாழ்க!' வென்றே
இனக்குரல் உயர்த்தி அன்று
பொன்னான 'மாசே துங்'கும்
புகழ்பூத்த 'கமால்பா ஷா'வும்
தன்னாட்டை உயர்த்தி னார்கள்.
தானையைக் கூட்டும் அண்ணா
'என்னாடு வாழ்க!' என்றார்;
எழில்'திரா விட'மும் வாழும்!

அன்னவர் தலைய சைத்தால்
ஆயிரம் படைகள் கூடும்!
அன்னவர் நாவ சைத்தால்
அணுவெலாம் வீரம் பாடும்!
அன்னவர் கண்ண சைத்தால்
ஆதிக்கம் அசைந்தே ஆடும்!
அன்னவர் விரல சைத்தால்
அடுபகை நடுங்கி ஓடும்!

எதைச்சொல்லி முடிப்பேன்? அண்ணா
எண்ணாத துறையே இல்லை!
கதைகளால், நாட கத்தால்,
கட்டுரைத் திறத்தால், பேச்சால்,
சிதைவிலாக் கருத்தை ஆக்கிச்
சிந்தனை விருந்து வைக்கும்
**புதையலாம் அண்ணா, நாட்டின்**
**புதுமுறைச் சமையற் காரர்!**

❄

# மயிலை முத்து



அந்தநாள் கொற்கை முத்தோ
அரசர்க்கு வாய்த்த செல்வம்;
இந்தநாள் மயிலை முத்தோ
இளைஞர்க்குக் கிடைத்த செல்வம்!
சிந்தையால், மொழியால், எல்லாச்
செயலாலும் தமிழே என்று
சந்ததம் பாடும் செல்வம்!
தமிழ்ச்செல்வம், பெரிய செல்வம்!

அறியாமைப் பெரிய வர்க்கே
'அகராதி' ஆனார்! சின்னஞ்
சிறுவர்க்குக் கவிதை ஆக்கித்
தினம்தரும் 'ஈசாப்' ஆனார்!
வெறிகொண்டு தமிழ்ப ழிக்கும்
வீணர்க்குக் 'கீரன்' ஆனார்!
நெறியினில் பிறழா அன்னார்
நேர்புகழ் என்ன சொல்வேன்?

கரும்பிலே இனிப்பி ருக்கும்;
காவிலே மணமி ருக்கும்;
இரும்பிலே வலிவி ருக்கும்;
இவையெலாம் ஒருங்கே சேர்த்து
விரும்பிடும் வகையில், காண்போர்
வியப்புறும் வகையில், ஈங்கே
அரும்பிடும் சிறுவர்க் காக
அன்றாடம் எழுதும் மன்னர்!

அன்னவர் பெருமை கூற
யாருக்கே ஆற்றல் உண்டு?
சென்னையில் 'மாண வர்'க்காய்ச்
சீருயர் 'மன்ற'ங் கண்டார்!
கன்னலை 'முத்துப் பாடல்'
கவிதையில் தேக்கித் தந்தார்.
சின்னவன் எனக்கே அன்னார்
சீர்பாடத் திறமை ஏது?



# பம்மல் சம்பந்தனார்

செம்மலே! அறிவுக் கோயில்
　　சிகரமே! கலைத்தாய் ஈன்ற
பம்மலே! இழிக்கூத் தென்று
　　பழித்தோரின் நாவ டக்க
சிம்மமாய்ப் புகுந்தீர்! நல்ல
　　தேனூறும் நாட கங்கள்
இம்மென்னு முன்னே நூறாய்
　　எழுதினீர், குவித்தீர் ஈங்கே!

'நாடகம் என்றால், அஃதோர்
　　நள்ளிராக் கேலிக் கோலம்!
ஆடுவோர் எல்லாம் பொய்க்கூத்
　　தாடிகள்!' என்றே அந்நாள்
நாடெலாம் சொன்ன நேரம்
　　நல்லவர் நீங்கள் வந்தீர்!
நாடகம் எழுதிப் பின்பு
　　நடிக்கவும் செய்தீர்! வென்றீர்!

தாய்க்குலப் பெருமை பாட,
　　தமிழரின் வீரங் காட்ட,
ஏய்ப்போர்க்கு நீதி கூற,
　　எழுதிய 'மனோக ரா'வும்
வாய்விட்டுச் சிரிக்க வைத்த
　　வண்'சபா பதி'யும் அன்று
போய்க்காணச் சென்றோர் வானப்
　　பூக்களின் மிகுதி யாவர்!

எறிகடல் முத்தை ஈந்தே
        இசைபெற்ற 'கொற்கை'யைப்போல்
'அறிஞ'ரை நாட்டுக் கீந்த
        அறியநல்'பச்சை யப்பன்'
நறுந்தமிழ்த் தொண்டு காண
        நின்னையும் ஈந்த தென்னும்
வெறிக்கூத்தால் மகிழு கின்றோம்!
        வேறென்ன சொல்வோம்? வாழி!



# இருமடல்கள்

**அவன்: –**

''மாங்காட்டிற் போய்க்கூவாக் குயிலே! என்றன்
　　மனக்காட்டைச் செழிக்கவைக்கும் மழையே! நெஞ்சில்
நீங்காத குளிர்நிலவே! உந்தன் அத்தான்
　　நெஞ்சார வேண்டுகிறேன்; இன்று மட்டும்
தூங்காமல் முதற்சாமம் முடிந்த பின்னர்
　　தொலைவிலுள்ள தோப்புக்கே நடந்து வா,வா!
ஏங்கிநிற்கும் நானுமங்கே வருவேன்; பின்னர்
　　ஏட்டிலில்லாக் கதையெல்லாம் நடத்தித் தீர்ப்போம்!

புத்தமுதே! ஒருநாளும் இரவு நேரப்
　　பொழுதினிலே வரச்சொல்லி அழைத்த துண்டா?
புத்தகத்தைத் தூக்குகின்ற கல்வி நேரப்
　　பொழுதினிலே வரச்சொல்வேன்; வருவாய்; மஞ்சட்
புத்தொளியை விரிக்கின்ற மாலை நேரப்
　　பொழுதினிலே நான்வருவேன்; வருவாய்! இன்றோ
முத்தழகே! தனிமையிலே வானில் மேவும்
　　முழுநிலவில் உனைக்காண ஆசை கொண்டேன்!

வாடாத பனிமலரே! வா,வா; தூக்கம்
　　வாராத தொல்லையினை வந்தே போக்கு!
பாடாத பைங்கிளியே! வா,வா; முள்ளாய்ப்
　　படுக்கைஎன்னைக் குத்துகின்ற துன்பம் நீக்கு!
தேடாத நறுந்தேனே! வா,வா; வந்து
　　தேடுகின்ற விழிகளுக்கு மகிழ்வுண் டாக்கு!
ஓடாத குளிர்நிலவே! இன்று மட்டும்
　　'உம்'மென்று சொல்லிவிடு; மறுக்க வேண்டாம்!''

**அவள்:**

''நெஞ்சுக்குள் நெஞ்சான அத்தான்! உங்கள்
நீள்மடலைக் கண்டேன்நான்! ஆசை யோடு
கொஞ்சுதற்குத் தோப்பருகே வா,வா வென்றே
கூறியுள்ளீர்! சொல்வதற்குத் தயக்க மென்ன?
**தஞ்சைவள நெல்எனினும் உமிதான் போனால்
தரையினின்று முளைப்பதுண்டா? அதுபோல் சொன்னால்
வஞ்சியர்க்குப் பெருங்கற்பே உமிதான்; இங்கே
வழிசிறிது தவறிவிட்டால் தமிழ்ப்பெண் ஏது?**

கிண்ணத்தில் இருந்தாலே பன்னீர்; சிந்திக்
கீழ்விழுந்தால் அதுபன்னீர் இல்லை; ஈர
மண்ணுக்குள் இருந்தாலே வேராம்; அன்றி
மண்ணினின்று பெயர்த்துவிட்டால் உயிர்வேர் இல்லை!
வெண்ணெயென்றால் நெருப்பருகே செல்லா முன்தான்;
வெந்தணலில் பட்டுவிட்டால் வெண்ணெய் இல்லை!
பெண்ணுக்கும் இவைபொருந்தும்! மணம்முன் இன்பம்
பெற்றுவிட்டால் அவள்தமிழ்ப்பெண் இல்லை, அத்தான்!

பாம்பிருக்கும், தேளிருக்கும் வழியில் என்ற
பயமில்லை என்நெஞ்சில்! பாதை யோர
வேம்பினிலே பேய்இருக்கும் என்றே மூடர்
விடும்கதைக்கும் அஞ்சவில்லை! மணநாள் வைக்கச்
சோம்பலுடன் நெடுநாட்கள் கழிப்பீர் என்றே
துளியேனும் எண்ணவில்லை; பொறுப்பீர்! **நாங்கள்
ஓம்புகின்ற 'கற்'பொன்றே இல்லை யென்றால்
உடல்விருந்தை அளித்திடுவேன், மணத்தின் முன்பு!**

# மின்னுவதெல்லாம்



நெற்றியில் வியர்வை தேங்க,
நெஞ்சத்தில் சோர்வு தேங்க,
சற்றேனும் மகிழ்ச்சி யின்றித்
தள்ளாடி நடந்தேன்! மேற்குப்
புற்றிலே கதிரோன் ஓடிப்
புகுந்தனன்; இருளின் ஆட்சி
பற்றிற்றாம் உலகை; நோக்கும்
பார்வையும் மங்கக் கண்டேன்.

அடையாற்றுக் கடற்க ரை'க்கே
அலுங்காமல் நடந்தேன்; பிய்ந்த
வடைபோன்று நிலவோன் விண்ணில்
வாட்டமாய் நடந்தான்! வானக்
கடைக்காரி விரித்த மின்னற்
கல்வைரம் விற்க வில்லை!
முடைஅங்கும் உண்டு போலும்!
மூடிவாய் அமர்ந்தி ருந்தேன்.

'பூ'வென்று கூவிப் பித்தன்
பொடியரை விரட்டு தல்போல்
'ஓ'வென ஆர்த்தெ ழுந்தே,
ஊர்ந்திடும் நண்டை யெல்லாம்
பூவெண்மை அலைகள் ஓடிப்
பூதம்போல் விரட்டக் கண்டேன்!
'காவலோ இவைகள் ஆணிக்
கடல்முத்துக்' கென்று கேட்டேன்!

மரமொன்றே ஆழ நீரில்

 'மடா'ரென்று சாய்ந்தாற் போன்றே

அருகிலே ஓசை கேட்டேன்!

 ஆமடா! யாரோ அங்கே

விரைந்திட்டார் கடலி னுள்ளே;

 வேகமாய்ச் சென்றேன்; பாய்ந்து

கரைசேர்த்தேன்! பாவம், ஓர்பெண்

 கட்டைபோல் மயங்கி நின்றாள்.

இருபத்து நான்கி ருக்கும்;

 எடுப்பான எழிலார் தோற்றம்!

கருநிறச் சீலை தோயக்

 கற்சிலை போன்றி ருந்தாள்!

உருவத்தைத் தொட்டேன்; இன்னும்

 உயிர்மூச்சு நிற்க வில்லை!

புருவத்தை நெளித்தாள்; மெல்லப்

 புரண்டாள்!செவ் விழிதி றந்தாள்!

''ஏனம்மா? உயிர்மு டிக்க

 எப்படித் துணிந்தாய்? இங்கே

நானுனைக் காணா விட்டால்

 நமனைநீ கண்டி ருப்பாய்!

பூனையும் புழுவு மிந்தப்

 புவிதனில் வாழு மென்றால்

ஏனம்மா உனக்கு மட்டும்

 இடந்தானா இல்லை?'' என்றேன்.

''பேசாதீர், அய்யா! இங்கே
        பெண்ணாக ஏன்பி றந்தேன்?
கூசாமல் நானும் சாகக்
        குறுக்கேநிற் காதீர்! செல்லாக்
காசாகி விட்டேன்! மக்கள்
        கடைச்சந்தை எனக்கோ இல்லை!
நீசாக வேண்டாம் என்று
        நீர்சொன்னால் நிற்க மாட்டேன்!''

''என்னதான் உனக்கு நேர்ந்த
        இடையூறு சொல்வாய்!'' என்றேன்!
சின்னதோர் வாய்தி றந்து
        செப்பினாள்; ''பிறந்த போதே
அன்னையை இழந்தேன்; பின்னர்
        அப்பனை இழந்தேன்; தாலி
பின்னிய கணவன் கூட
        பேடியைப் போல்ம றைந்தான்!

தாலியைக் கட்டி விட்ட
        தறுக்கனும் மறைந்தான் என்றால்
வேலியார் எனக்கே?'' என்றாள்!
        விழியாலே எதையோ சொன்னாள்!
''கூலிக்கே இரும்ப டிக்கும்
        குப்பன்நான் அம்மா! இந்தா
நாலணா உனக்கே!,'' என்று
        நங்கையின் கரத்தில் வைத்தேன்!

—

''இதுதானா?'' என்றாள். ''ஆமாம்.

இருந்ததே இதுதான்!'' என்றேன்!

''மதுவெள்ளம் 'வண்டு'வேண்டின்

'மகிழம்பூ'எங்கே போகும்?

உதவிகள் கோடி செய்ய

உண்டம்மா உள்ளம்; ஆனால்,

நிதியில்லை; கதியு மில்லை

நீசென்று வருவாய்!'' என்றேன்!

நடந்தவள் போன பின்னர்

நடந்திட்டேன் வீடு நோக்கி!

படர்ந்தது துயரம் நெஞ்சில்

பாவையின் விதிநி னைத்தேன்!

'அடடா! இவ் வெட்கக் கேடும்

அகல்வதோ எந்நாள்?' என்றே

உடைபட்ட உள்ளத் தோடே

உறைவிடம் சென்ற டைந்தேன்!

பதினைந்து நாட்கள் ஓடிப்

பறந்தன. அன்று மாலை

அதிவேலை முடித்த தாலே

அயர்வுடன் நடந்தேன்! விண்ணில்

பதிலுக்கு நிலவ னுப்பிப்

பகலவன் மறைந்தான்! நல்ல

விதித்'தொழிற் சட்டம்' அங்கும்

விளங்குதல் நினைத்துக் கொண்டே,

அடையாற்றுக் கடற்க ரைக்கே

அமைதியாய் நடந்தேன்! காதைப்

புடைத்ததே அலையின் ஓசை!

போய்த்தனி இடத்த மர்ந்தேன்.

விடைபெற்ற நெஞ்சம் எங்கோ

வெளியிலே பறந்த நேரம்

தடைபோட்ட இருவர் பேச்சைச்

சற்றுநான் கூர்ந்து கேட்டேன்!

அங்குநான் கண்ட காட்சி

அனல்நெஞ்சில் எழுப்பக் கண்டேன்!

நங்கைதான், அந்நாள் கண்ட

நச்சுப்பெண் ஒருவன் கையில்

தங்கியே கிடந்தாள்; **'சொன்ன**

**சரித்திரம் தனையே'** சொன்னாள்!

பொங்கிடும் ஆத்தி ரத்தால்

''பூதமா? பெண்ணா?'' என்றேன்!



# பூ இழந்தவள்

ஆந்தைமட்டும் உறங்காத நேரம்; பூமி
அசையாமல் தூக்கத்தில் கிடந்த நேரம்!
மாந்தோப்புக் கனிகளெலாம் அணிலின் வாயால்
மண்மீது சாய்கின்ற இரவு நேரம்!
நீந்திவந்த வெண்ணெய்நிலா உருகி எங்கோ
நீர்த்துவிட்ட நள்ளிரவு நேரம்! வண்டு
பூந்தாதுள் குளிக்கின்ற நேரம்! ''அய்யோ!
புறப்படுங்கள்,'' என்றஒலி கேட்டெ ழுந்தேன்.

நகரத்தின் கோடியிலே அமைந்தே யுள்ள
நரிவாழும் இடுகாட்டை நோக்கி ஊரார்
வெகுவிரைவாய் ஓடுவதைக் கண்டேன்! நெஞ்சம்
விதிர்விதிர்க்க ''செய்திஎன்ன?'' என்றேன்! ''நின்று
பகர்வதற்கு நேரமெங்கே? புறப்ப டுங்கள்;
பயங்கரத்தைக் காணுங்கள்!'' ஒருவன் சொன்னான்!
திகிலுடனே ஓட்டமுடன் சென்றேன்! கண்டேன்,
சிந்தையினைத் தாக்குகின்ற காட்சி யொன்றை!

வாயெல்லாம் நுரையோடு குருதி கொட்ட
மருதன்அங்கே சவமாகிக் கிடந்தான்! மேலே
சாய்ந்தணைத்துக் கதறிநின்றே அழுதாள் செல்லி!
''சரியாகி விட்டதத்தான் நினைத்த'' தென்றாள்!
''பேய்அறைந்து விட்டதடா பாவம்! நல்லோன்;
பிழையற்றோன்; போய்ஒடுங்கி விட்டான்!'' என்றே
வாய்ச்சொல்லை உதிர்த்தார்கள் கூடி நின்றோர்;
மறுகணமே பிரிந்தார்கள் எறும்பு போலே!

இத்தனைநாள் நோய்தீர்த்த வைத்திய னுக்கே
இறுதிதரும் கொள்ளைநோய் வந்த தைப்போல்
இத்தனைநாள் சவக்குழிகள் தோண்டி வந்தான்;
இன்றவனே ஒருகுழிக்குச் சொந்த மானான்!
முத்தனையாள் செல்லியினைத் தேற்ற, மாலை
மூன்றுமணி யளவினிலே சென்றேன். நெஞ்சைக்
கொத்துகின்ற துயரத்தில் மிதந்தி ருந்தாள்,
குலையறுத்த வாழையைப்போல் நீர்பெ ருக்கி!

''ஏன்செல்லி, நேற்றுநீ அழுத நேரம்
எண்ணியது முடிந்ததத்தான் என்றாய்?'' என்றேன்.
''ஏன்அய்யா! அதைநீங்கள் கிளறு கின்றீர்?
இடிவிழுதல் நானறிந்தே இருந்தேன்! புள்ளி
மான்தனியே புலிக்காட்டில் வாழ்ந்த தில்லை;
வையகத்தில் விதவைபெற்ற வாழ்வு மில்லை!
நான்மட்டும் வாழ்வதிங்கே இயல்வ தாமோ?
நரிக்கூட்டம் சதிபுரிந்து விட்ட'' தென்றாள்!

''விளக்கமாய்ச் சொல்''என்றேன்! செல்லி சொன்னாள்;
''வேறென்ன நான்சொல்வேன்? கைம்பெண் வாழ்வில்
விளக்கேற்ற என்மருதர் துணிந்தார்! சாக
விழைந்தஎனை 'மனையாட்டி' என்று சொன்னார்!
குளவிகட்குக் கொட்டுவதே வேலை; காமக்
குறும்பருக்கோ எமைவாட்டல் நித்தம் வேலை!
விளக்குவைத்த பின்ஒருநாள் கொடியர் நால்வர்
வீடுவந்தே எனையழைத்தார்; சத்தம் போட்டேன்!

மருதர்அங்கே வந்தடைந்தார்; வெகுண்டார்; அந்த
மடையருக்கே எச்சரிக்கை விடுத்தார்; மக்கள்
உருவத்தில் உலவிவந்த ஓநாய்க் கூட்டம்,
'ஓடில்லா வீட்டிற்குக் காவல் நீயா?
விருப்பமுடன் பருகுதற்கே ஆற்று வெள்ளம்!
விதவைகளும் அப்படித்தான்!' என்றார்! பின்னர்
தெருவோடு நகைஎழுப்பிச் சென்றார்! என்றன்
சிந்தையெலாம் புயல்மோத அஞ்சி நின்றேன்!

நேற்றிரவு சோறுண்டு காவல் சென்றார்!
நீதியற்றோர் எண்ணத்தை முடித்துக் கொண்டார்!
காற்றல்ல, பேயல்ல அறைந்த தெல்லாம்;
கயவர்களே அத்தானின் கதைமு டித்தார்!
சேற்றைவிட்டுப் பறித்தசெடி வாழ்ந்த தில்லை;
சீர்கெட்டேன்; அவரைவிட்டு வாழ்வ தெங்கே?''
ஊற்றெடுத்த விழிகாட்டி அழுதாள்; ஏதோ
ஓரிருசொல் ஆறுதலாய்ச் சொல்லி வந்தேன்!

மணிஇரவு பத்திருக்கும்; எழுது தற்கு
மனத்தேரை நான்விரட்டிக் கொண்டி ருந்தேன்!
''துணிவென்ன இவளுக்கு? பாவி!'' என்ற
சொற்கள்வந்து காற்றினிலே மோத நானும்
தணல்பட்டே எழுவதுபோல் எழுந்தேன்; சென்றேன்!
சரித்திரத்தைக் கயிற்றினிலே முடித்த செல்வி
பிணமாகித் தொங்குவதைக் கண்டேன்! அந்தப்
பேதைக்கு வேறுவழி தோன்ற வில்லை!

சீச்சீச்சீ! பெண்பெருமை பேசு கின்ற

சீர்கெட்ட மனிதர்களே! இதுவா நீதி?

மூச்சவிழ்ந்த பிணத்திற்குப் பங்கு போடும்

முறைகெட்ட கழுகுகளை மிஞ்சி விட்டீர்!

**பூச்சரத்தை, தாலியினை இழந்த பெண்கள்**

**'பொதுவுடைமை' உங்களுக்கே என்ப தாலே**

**தீச்சுடராய் வாழஎண்ணித் தூக்கில் ஏறும்**

**செல்லிகளைத் தடுத்திடுவோர் இல்லை, இல்லை!**

卐



# ஆறும் பதினாறும்

சிட்டைப்போல் கலைமானின் கன்றைப்போல், நானும்
திரிந்துவந்தேன்; ஆறாண்டு நிறையவில்லை அன்று!
பட்டாலே பாவாடை சட்டைஅணி வித்துப்
பள்ளிக்குக் கைபிடித்து என்தந்தை வருவார்!
கொட்டுகின்ற சிறுமேளம், கொஞ்சுதற்குப் பொம்மை,
கொள்ளைஇன்பம் தருகின்ற இனிப்புவகை எல்லாம்
அட்டியின்றிக் கேட்டவண்ணம் வாங்கியவர் தருவார்!
அகமகிழ்வு கொண்டிடுவேன்; அன்புமுத்தம் தருவார்!

எனையிழுத்து மடிமீதில் என்அன்னை அமர்த்தி,
''எழுதாத ஓவியமே! ஈடில்லா முத்தே!
பனைமரத்து நுங்கைப்போல் தித்திக்கும் இதழால்
பனிமொழியே! பதில்சொல்வாய்!'' என்றுகன்னம் தடவி,
எனைநோக்கி, ''யாரையம்மா கட்டிக்கொள் வா''யென்
றெனைக்கேட்பாள்; உள்ளத்தில் கள்ளமிலா நானும்
''தினம்பள்ளி துணைக்குவரும் கதிரவனைக் கையால்
சேர்த்தணைத்துக் கட்டிடுவேன்'' எனச்சொல்வேன்; சிரிப்பாள்!

வளராத பருவத்தில் உளம்முதிரா நிலையில்
வாய்ச்சொற்கள் உதிர்த்ததெலாம் இனும்மறக்க வில்லை!
வளம்நிறைந்த தஞ்சைநிலக் கரும்பைப்போல் இன்று
வளர்ந்துவிட்டேன்; பதினாறு வயதுமங்கை யானேன்!
தளையிட்டு, ''ஆளாகி விட்டாய் நீ!'' என்றார்!
''தாண்டாதே இல்லத்து வாயிலினை,'' என்றார்!
உளம்நிறைந்த எதிர்வீட்டுக் கதிரவனைக் காண
உந்துகின்ற நெஞ்சத்திற் கணைபோட்டு விட்டார்!

கொடிபடர கொம்பொன்று தேவையெனக் கூறி,
குமரிஎனக் கொருகணவன் தேடிவர வேண்டி
முடிவெடுத்தார் என்வீட்டார்; அடுத்தஊர் சென்றார்;
முன்காணா வாலிபனைப் பார்த்துவந்தார்! ''ஏனோ
வெடிக்கவைக்கின் றீர்நெஞ்சில்?'' எனவிளக்கம் கேட்டேன்!
''வீண்பேச்சேன்? நம்சாதி அவனேதான்,'' என்றார்!
''முடிப்பீர்கள் எதிர்வீட்டுக் கதிரவனை,'' என்றேன்;
''மூடிடுவாய் அவன்வேறு சாதியடி!'' என்றார்.

**''ஆறுவய தில் என்னை அன்போடு கேட்ட**
**அக்கேள்வி பதினாறு வயதினிலே கேட்டு,**
**மாறுபடாக் காதலினை ஏற்றிடுக!'' என்றேன்;**
**மன்றாடிக் கால்வீழ்ந்தேன்; மறுத்துவிட்டார். வாழ்வில்**
**வேறுவழி காணாமல் வையகத்தை விட்டே**
**விரைகின்றேன்; சாவதில்தான் எனக்கமைதி கிட்டும்!**
**நூறுவகை இலக்கியத்தால் காதலினை வளர்த்த**
**நுண்ணறிவுத் தமிழ்நாடு இதுதானா? வெட்கம்!**

# நான் தமிழச்சி



நெஞ்சாவேன் என்றீர்! நீங்கா
நிழலாவேன் என்றீர்! கண்கள்
துஞ்சுமோ மறந்தே என்றீர்!
துணையாவேன் என்றீர்! நீயே
அஞ்சுகம் என்றீர்! வாழ்வின்
அமுதமே என்றீர்! இன்றோ
பிஞ்சிலே பழுத்தேன் என்ற
பிழைக்குநீர் ஆக்கிச் சென்றீர்!

வருகிறேன் உறுதி என்றீர்!
வாழ்வில்நான் இணைத்தே இன்பம்
தருகிறேன் என்றீர்! சங்கத்
தமிழ்மீதே ஆணை என்றீர்!
வருகிறேன் என்ற நீரோ
வந்தீரா, என்றால் இல்லை!
கருகிய மொட்டாய் ஆனேன்!
கலக்கிய குளமாய் ஆனேன்!

புதுமையின் பெருமை சொன்னீர்!
புரியாத கவிதை சொன்னீர்!
மதுவென்றே இதழைச் சொன்னீர்!
மலரென்று விழியைச் சொன்னீர்!
வதுவைக்கு முன்னால் கூடி
மணஞ்சேர்த்தீர்! அதனால் 'மூளிப்
பதுமை'யாய் ஆகி விட்டேன்;
பாவியை மறந்தே விட்டீர்!

என்னநான் சொல்வேன், அத்தான்?
இனிநானும் வாழ வேண்டின்
முன்னடி எடுப்பீர்! சொன்ன
மொழிகாப்பீர்! உமக்கு நானோ
சின்னவள், செய்வ தென்ன?
திக்கற்று வாடு கின்றேன்!
பின்னும்நீர் மறுப்பீர் என்றால்
பிணமாவேன், உறுதி அத்தான்!

''நானில்லை என்றால் வேறு
நல்லஆண் இலையா?'' என்பீர்!
ஏனில்லை, மிகுதி ஈங்கே!
இருந்தாலும் எண்ணிப் பாரீர்!
**வான்போர்த்த உலக மீதில்**
**வண்டமிழ் நாட்டில் தானே**
**நான்ஒரு பெண்ணாய் வந்தேன்!**
**நங்கைவே றென்ன சொல்வேன்?**

# தமிழேறு

## அன்னைத் தமிழ் வணக்கம்

மழைதோற்கும் நெஞ்சம்; முல்லை
மலர்தோற்கும் தூய்மை; பஞ்சின்
இழைதோற்கும் மென்மை; ஈன்ற
என்அன்னை தோற்கும் பாசம்
பிழைஇன்றிப் பெற்ற தாயே!
பேதைநான் கவிதை பாட
விழைந்திட்டேன்; நகைத்தி டாமல்
விழியொளி அருள்வாய் அம்மா!

---

# 1 சீர்மனைக்குச் சேலூர்



வெளுத்தது கிழக்கு; விரைந்தது காரிருள்;
உளுத்த குடையாய் உயர்ந்த வானத்தில்
சிரித்த கயல்கள் திடீரென மறைந்தன.
உரித்த முந்திரி உருவில் நடந்த
மூளி நிலவும் முடங்கிய தெங்கோ!
ஆளி மீன்கள் அல்லிக் குளத்தில்
துள்ளி விழுந்தன; தூயவர் காதலை
அள்ளிச் செருகிய அன்ன நடையினர்
நீர்க்குடம் தாங்கி நிலைக்குளம் ஏகினர்.
வேர்வைக் குளத்தை விரிந்த மார்பில்
தாங்கும் உழவர் தம்படை கொண்டு
ஓங்குசீர் வயல்களை உழுதிட நடந்தனர்.
எழிலே உருவாய், பொழிலே அரணாய்,
தொழிலே மூச்சாய், சுறுசுறுப் போடு
துலங்கும் **'சேலூர்'** தூய்தமி ழகத்தில்
இலங்கும் சிற்றூர்க் கிலக்கண மலவோ?
அச்சிற் றூரின் அழகு மகுடமாய்
மச்சுவீ டொன்று மஞ்சள் வெயிலில்
தங்க நிறமாய்த் தகத கத்தது.
சுங்கம் வாங்கும் துறைமுகம் போலே
அம்மா ளிகையில் அமைதியே இல்லை;
கம்மாளன் வீட்டு கடும்பட் டறைபோல்
பெட்டிகள் பூட்டும் பேரோசை கேட்டது.
கட்டிய படுக்கை ஊர்தி சென்றது.
பண்ணையைக் கொண்ட **அண்ணா மலையார்**
கண்ணாய் வளர்த்த கன்னற் **செல்வ**னை
பட்டம் படித்திட பட்டணம் அனுப்பத்
திட்டம் நெஞ்சில் தீட்டினார்;
செயல்நிறை வடைந்தது செம்மையாய் இன்றே.

---

# 2 விடைபெற்றான் செல்வன்



''செல்வமே! விழியான மகனே! உன்னைச்
சென்னைக்கே அனுப்பிடவும் துணிவே இல்லை!
கொல்லுகின்ற பிரிவுக்கே அஞ்சு கின்றேன்;
குளிர்முகத்தைக் காணாமல் பொழுதா போகும்?
சொல்லுகநீ! ஏதேனும் தேவை என்றால்
சுடர்மகனே! ஒருநொடியில் முடித்து வைப்பேன்!''
இல்லையென்ற சொல்லறியா செல்வன் தந்தை
இதைக்கூறி மகன்முகத்தை நிமிர்ந்து பார்த்தார்!

''மாந்தோப்பின் அணிலுக்குப் பசியு முண்டோ?
மலர்க்காட்டு வண்டுக்குத் தேவை ஏது?
சாந்துணையும் துணைக்குவரும் கல்வி கற்க,
தந்தையர்நீர் சென்னைக்கே அனுப்பு கின்றீர்!
நீந்துகின்ற வராலுக்குப் பிறந்தேன் நானும்;
நீச்சலுக்கே அஞ்சவில்லை; ஆனால் உள்ளம்
ஏந்தியுள்ள குறையொன்றே உண்டு; சொல்வேன்,
எனைநீங்கள் பொறுத்திட்டால்!'' என்றான் செல்வன்

இதுவரைக்கும் நெஞ்சத்தில் பெருங்க னத்தை
ஏற்றிவைத்த அவன்அன்னை வாய்தி றந்தாள்;
''எதுமகனே? எதுவேண்டும்? கேள்,கேள்! உன்றன்
ஏற்றந்தான் எம்மூச்சு! கேட்பா யானால்
அதுமுடிய அப்பாவும் உதவி செய்வார்;
அஞ்சாமல் கேள்!''என்றாள் அன்னை. சொன்ன
மதுக்குரலைச் செவியேற்ற செல்வன், மீண்டும்
வாய்மலர்ந்த நகைகாட்டிக் கருத்தைச் சொன்னான்.

''ஒன்றுமில்லை! குறையேது எனக்கே? இங்கே

உயர்பள்ளி நான்படித்த போது, கூட

சென்றுவந்த **முத்து**வையும் அறிவீர்; கல்விச்

செல்வமுற்ற அன்னவனோ பணமில் லாமல்

ஒன்றாகச் சென்னைவர இயல வில்லை;

உதவிசெய்தால் நலமிலையா?'' என்றான் செல்வன்.

''நன்றப்பா இருவருமே செல்க! இன்றே

நான்அதற்குத் துணைபுரிவேன்!'' என்றார் தந்தை.

நேற்றுவரை காற்றாகத் திரிந்து வந்த

நெடுவயலை, ஏரியினை, காவை, தோப்பை,

ஆற்றையெல்லாம் மறந்துவிட்டுப் பிரிந்து, தூய

அன்னையவள் பாசமுகம் பிரிந்து, நட்பின்

ஊற்றான முத்துவுடன் சென்னை நோக்கி

ஒருவழியாய்ப் புறப்பட்டான் செல்வன்; ஆழச்

சேற்றுள்ள நெற்பயிரும், வாழை யாவும்

சீரோடு கையசைத்தே அனுப்பிற் றம்மா!

''மலரெல்லாம் தாமரையா? உலகில் உள்ள

மாந்தரெல்லாம் உனைப்போல உண்டா செல்வம்?

சிலருக்குள் சிலர்தாமே மண்ணின் மீதில்

'சீதக்கா தி'யைப்போன்ற நெஞ்சம் பெற்றார்!''

பலசொல்ல வாயெடுத்தான் முத்து; ஆனால்,

''பாரப்பா! புகழாரம் போதும், இங்கே

கலகலக்கும் கருவூலத் தங்க மில்லை;

கவிஎழுதி நீட்டாதே!'' என்றான் செல்வன்.

இருவருமே சிரித்தார்கள்; சூழ்ந்தி ருந்த
இருபுறத்து வயலெல்லாம் சிரித்து நிற்கும்
சருகொன்று புயற்காற்றில் பறப்ப தைப்போல்
சளைக்காமல் கருப்புக்கார் சென்னை நோக்கி
விரைவாகப் பறந்ததங்கே! ஓடி வந்து
வீழுகின்ற நீரையெலாம் ஏற்றுக் கொள்ளும்
கரைகாணாக் கடல்போலே உள்ள சென்னை
கைநீட்டி ஏந்திற்றே இருவர் தம்மை!

# 3 உணவு விடுதியில்



அடைந்தனர் சென்னை தன்னை!
அலுப்பெலாம் போக்கிக் கொள்ள
இடந்தேட முனைந்தார்; அங்கே
எதிர்ப்புறம் ஒருவன் வந்தான்.
''விடுதியும் உண்டா தங்க?
விடைசொல்வாய்!'' என்றார்; அன்னோன்
''சடுதியில் அழைத்துச் செல்வேன்;
தாங்களும் புதிதா?'' என்றான்

தொடுதற்கே இயலா வானைத்
தொட்டங்கே வெற்றி கண்ட
நெடுமாளி கையின்முன் னாலே
நிறுத்தினான் காரை. உள்ளே
விடுதியின் எழில்தோற் றத்தில்
விழியோட்டி உள்ளே சென்று
நடுவறை ஒன்றில் தங்க,
நல்லெண்ணம் தெரிவித் தார்கள்.

உடன்வந்தோன் விடையைப் பெற்றான்;
உயிர்நண்பர் அறைக்குச் சென்றார்.
கடல்திமிங் கலமோ சின்னக்
கயலெலாம் விழுங்கா விட்டால்
உடலெங்கே கொழுக்கும்? நீண்டே
உயர்ந்தஇவ் விடுதிக் கேதான்
இடம்மாறி வருவோர் இன்றேல்,
எடுப்பான தோற்றம் ஏது?

''என்னப்பா, செல்வம்? நாளை

எவைஎவை நமது திட்டம்?''

சொன்னவன் முத்து; பின்னர்

தொடர்ந்திட்டான் செல்வன், ''இங்கே

மன்னும்கல் லூரி ஒன்றுள்

மகிழ்வுடன் சேர வேண்டும்;

பின்னதோர் விடுதி சேர்ந்து

பிழையின்றிக் கற்க வேண்டும்.''

''எனக்கிங்கோர் எண்ணம் தோன்றும்;

இங்கேஎன் சொந்தத் தோழர்

தனக்கொரு பட்டம் வேண்டித்

தங்கியே படிக்கின் றாராம்;

உனக்கொரு தடையும் இன்றேல்

உடன்சென்று கருத்த றிந்து

வினைச்செயல் முடிப்போம் பின்னர்!

விடையென்ன?'' என்றான் முத்து.

''காரினைச் செலுத்தி வந்தக்

களைப்பின்னும் தீர வில்லை.

வேரற்ற மரம்போல் நானும்

விழவேண்டும்; உறங்க வேண்டும்

ஊரினை இனியும் சுற்ற

ஒருக்காலும் முடியா தென்னால்!

நேரிலே நீயே செல்க!''

நெகிழ்வோடு சொன்னான் செல்வன்.

''ஆகட்டும். நானும் சென்றே
அவர்எண்ணம் அறிவேன். எங்கும்
ஏகிட வேண்டாம் நீயும்!''
எனமுத்து வெளியே சென்றான்.
காகத்தைக் கூட்டுக் கோட்டும்
காரிருள் உலகை மூட
ஏகிற்று; காளை செல்வன்
இமைமூடி கனவில் வீழ்ந்தான்.

---

# 4



# எதிர்பாராத இரவு

புலன்மாறிப் போயடங்க குழந்தை யைப்போல்
        பூச்சிரிப்பின் எழிற்செல்வன் உறங்கி விட்டான்;
சலசலவென் றேயாரோ கதவைத் தட்டும்
        சந்தடியால் அவன்தாவி எழுந்தான். சென்று
மெலத்தாழைத் திறந்திட்டான். தூக்கம் தந்த
        மென்மயக்கம் தீரவில்லை; விழிதி றந்தான்;
சிலையொன்று நின்றதங்கே! கொடுந்தேள் ஒன்றின்
        செங்கொடுக்கை மிதித்தவன்போல் அதிர்ந்து போனான்!

''யார்?யார்நீ? இங்கென்ன வேலை?'' என்றான்.
        ஏந்திழையோ அசையாமல் நின்றாள்; ''இந்தா,
பாரிங்கே! உனக்கென்ன வேண்டும்? உன்றன்
        பாதையையா தவறவிட்டாய்?'' என்றான். ஆனால்
கூர்விழியாள் குனிந்ததலை நிமிர வில்லை;
        கோதையவள் முகத்தினிலே சலன மில்லை.
''நேர்மொழியில் கேட்கின்றேன்; பதில்சொல்! இன்றேல்
        நிமிடத்தில் காவலரை அழைப்பேன்!'' என்றான்.

வந்தவளும் வாய்திறந்தாள்; ''ஆமாம். நானும்
        வழிதவறி விட்டவள்தான்; ஆனால் இன்றோ
இந்தஇடம் அனுப்பியவர் சொன்ன வண்ணம்
        இழைகூடப் பிறழாமல் வந்தேன்!'' என்றாள்.
''வந்தாயா? ஏன்வந்தாய்? உன்னை இங்கே
        வழிகூட்டி விட்டவன்யார்?'' என்று கேட்டான்.
''இந்தஇடம் உமைகொணர்ந்த தரகர் தானே
        எனைஅனுப்ப, நான்வந்தேன்!'' என்றாள் கன்னி.

''நள்ளிரவு; தனிமையில்நான்; நீயோ ஓர்பெண்;
நடைபோட்டு வந்துள்ளாய்; சரியா?'' என்றான்.
''மெள்ளமெள்ளப் பேசுங்கள்; இருட்டில் தானே
மெத்தஎன்றன் தொழில்நடக்க வேண்டும்; தீயக்
கொள்ளைக்குத் துணைஏது? நேரம் ஏது?
கோணாமல் எனைஏற்பீர்!'' என்றாள்; சாய்ந்தாள்.
''தள்ளிப்போ! கொடும்பாம்பே! நீந டத்தும்
தசைவாணி கத்திற்கே, நானா?'' என்றான்.

காவலரை அழைப்பதற்கு நடந்தான்; அந்தக்
கள்ளியினை ஒப்படைக்க முனைந்தான். ஆனால்
தாவிவந்த மங்கையவள் அவன்கா லின்கீழ்
சவம்போலப் போய்வீழ்ந்தாள்; கதறி நின்றாள்.
''சேவடியே துணையண்ணா! என்ன செய்வேன்?
தீத்தொழிலில் நான்தள்ளப் பட்டேன்; விட்டால்
ஆவதொரு பிழைப்புண்டா? அண்ணா! நீங்கள்
அருள்கூர்ந்து பொறுத்தருள வேண்டும்!'' என்றாள்.

''உடன்பிறந்த தமையன்என்றாய் என்னை! போயும்
உடல்விற்கும் தொழிலுக்கா வந்தாய் நீயும்?
கடைச்சேற்றுத் தாமரையும் நிலவு வந்தால்
கற்பினையே இதழ்மூடிக் காக்கு மாமே!
நடைநடந்து வந்தாயோ பேரம் பேச?
நாணமலர் உன்னடியில் சிதைந்த தெந்நாள்?
கடைவிரித்த கசாப்பினில்தான் சதையும் விற்கும்;
காரிருளில் நீவிற்க இவண்வந் தாயோ?

சீச்சீச்சீ! 'மா'னென்றா உம்மைச் சொன்னார்?

சிறுமயிரைக் கவரிமான் இழந்திட் டாலும்

மூச்சோடு வாழ்ந்திடுமா? உம்மை யெல்லாம்

மொழிக்குயிற்கே ஒப்பிட்டோன் எங்கே? தூய

பூச்செண்டில் குளிக்கின்ற ஆண்கு யில்தான்

போய்விட்டால் மற்றொன்று கூவிச் சாகும்.

ஈச்சமர நிழல்கூட நிலைக்கும்; ஆனால்

ஏந்திழையர் உங்கள்மனம் நிலைப்ப தேது?

விரட்டிவந்த காமுகனை வெறுத்தே ஓடி

வினைமணமே கூடாதென் றுரைத்த தூய

அரு'மணிமே கலை'யுன்றன் இனமா? மாலை

அணிவித்தோன் கணிகையிடம் விழுந்த பின்னும்

திரும்பும்வரை காத்திருந்த 'கண்ண கி'ப்பெண்

சீர்கெட்ட உன்னினமா? வெட்கம், வெட்கம்.

வருமானம் பெறுவதற்கே தன்மா னத்தை

வழியனுப்பும் உனக்கிங்கேன் அழுகை, கண்ணீர்?

பெண்ணென்றே உனைச்சொன்னால் குறள்வெட் காதோ?

பேடைஎனின் சொல்லுகின்ற நாகூ சாதோ?

கண்ணென்றும் மணியென்றும் படைத்த தெல்லாம்

கண்டோரைச் சாடையிட்டே அழைப்ப தற்கா?

மண்ணின்னும் உனைத்தாங்கி நிற்ப தும்ஏன்?

மாபாவிக் கொடும்பேயே! போ, போ!'' என்றே

விண்வெடித்த பேரிடிபோல் முழங்கி நின்றான்;

விழிநீரில் அன்னமங்கை நீச்ச லிட்டாள்!

கூரான சொல்லாலே குத்து கின்றீர்;

கொலைகாரச் சமுதாயம் கால்மு றித்த

தேராகி விட்டேன்நான்! என்றோ இங்கே

செத்தஉடல் தானண்ணா உன்முன் நிற்கும்!

வேரறுந்த பூங்கொடிக்குத் தண்ணீர் ஊற்றின்

வீண்தானே! உன்எதிரில் நிற்ப தற்கும்

சீரிழந்த பாவிக்குத் தகுதி உண்டா?

திட்டுங்கள்; போதாது!'' அழுதாள் மங்கை.

மோதுகின்ற முகில்தானே பொழியும் மாரி!

முழங்கியஅச் செல்வந்தான் கண்ணீர் விட்டான்;

''போதுமம்மா! போதுமினி விளக்க வேண்டாம்;

போக்கற்ற சமுதாயம் கிளப்பி விட்ட

ஓதையிலே துரும்பானாய்! கருகி விட்டாய்!

ஒழியட்டும் சமுதாயக் கழுகின் நீதி!

ஈதிங்கே இருநூறு ரூபாய் இந்தா!

எடுத்துப்போ!'' எனத்தந்தான்; பெற்றாள்; சென்றாள்.

# 5 கல்லூரியில் கருத்துப்போர்



தோழர்சொன்ன கருத்தேற்று இருவர் நல்ல
        சுடர்ப்புகழைத் தேக்கிவைத்த கல்லூ ரிக்கண்
ஆழம்நிறை பட்டத்து வகுப்பில் சேர்ந்தார்;
        அதன்விடுதி தனில்சேர்ந்து தங்கிக் கொண்டார்!
தாழம்பூ புதருக்குள் இருந்த போதும்
        தன்மணத்தைக் காற்றினிலே கலக்கும்; செல்வன்
வேழமென நடைபோட்டான் கல்லூ ரிக்குள்;
        வெற்றியின்மேல் வெற்றிகளைத் தொடர்ந்து பெற்றான்.

கல்லூரிப் பேரவையில் மாண வர்க்காய்க்
        கடும்சொற்போர் நடந்ததன்று; பலர்பங் கேற்றார்.
'நல்லதொரு மொழிஎன்ன மாண வர்க்கே?
        நலத்தமிழா? ஆங்கிலமா?' என்ற போரில்
எல்லோரும் கருத்துரைத்தார்; **அன்னம்** என்பாள்,
        ''எடுப்பான ஆங்கிலமே நமது தேவை;
சொல்லரிய 'ஷேக்ஸ்பிய'ரின் நாட கங்கள்
        சுவையூறும் உரைநூல்கள் உண்டா இங்கே?

நெஞ்சிழுக்கும் 'இழந்தசொர்க்க மில்ட்டன்' தன்னை
        நினைத்திடுமா உங்கள்தமிழ்? 'ஷா'வ டித்த
மிஞ்சுபுகழ் நாடகங்கள் உண்டா இங்கே?
        மேதையவன் 'ஷெல்லி'யைப்போல் ஒருவர் உண்டா?
கொஞ்சுமொழி வஞ்சியரைப் 'பைரன்'போலே
        குளிர்மொழியில் வடித்தவர்யார்? இயற்கைத் தேனில்
நெஞ்சினிக்கக் குளிப்பாட்டும் 'வொர்ட்ஸ்வொர்த்' தைப்போல்
        நீள்தமிழில் யாருண்டாம்?'' என்றாள்; சென்றாள்.

கையொலிகள் முழங்கினவே மகளிர் பக்கம்;
கவின்பரிசு அன்னத்திற் கென்றார்; சென்று
தையலவள் அமர்ந்தபின்னர் எழுந்தான் செல்வன்;
''தணல்பறக்கும்; அடலேறும் எழுந்தான்'' என்றார்.
மையமுள்ள மேடைக்கு வந்தான் செல்வன்;
''மாண்புடையீர்!'' எனத்தொடங்கிப் பேச லானான்:
''வையகத்தில் ஆங்கிலமும் தமிழும் பெற்ற
வயதினையே நாம்எண்ண வேண்டும் இங்கே!

ஆங்கிலத்தின் அகவைசொன்னால் எண்ணூ றென்பார்!
அக்குளத்தில் மீன்பிடித்தல் எளிது தானே!
ஓங்குதமிழ் வயதறிய முடிவ துண்டோ?
உயர்ஆழி மீனையெலாம் பிடிப்ப தெங்கே?
வீங்குதிரைக் கடல்விழுங்கி, செல்வி முங்கி,
வெறியரெலாம் தீயிட்டு விழுங்கி னாலும்
ஈங்கெட்டுத் தொகையோடு பத்துப் பாட்டும்
ஈரொன்ப தெண்கணக்கும் உள்ள தீங்கே!

குறளெங்கே இருக்கிறது? தமிழில் தானே!
குவலயமே தனக்குரிய தெனச்சொல் வானேன்?
'பிறப்பொக்கும் எவ்வுயிர்க்கும்,' என்றோன் யார்? யார்?
பிழையுடையோன் கடவுளென்றால் 'அழிக'என்றே
உறுதியுடன் முழங்கியவன் யார்? யார்? வாழ
'உற்றஅறம் பகுத்தளித்தல்,' என்று சொன்ன
செறுக்கவிஞன் யாரிங்கே? இவன்வாழ் நாளில்
திக்குபுகழ் ஆங்கிலமும் உண்டா? கேட்பீர்!

கரடிகளாய் விலங்குகளாய் ஆணும் பெண்ணும்
　　காட்டுணர்வுக் காமத்தில் கிடந்த நேரம்,
'திருமணத்தில் ஒருத்திக்கே ஒருவன்' என்றே
　　செப்பியதோர் எழிற்'சிலம்பு' முகிழ்த்த தெங்கே?
உருப்படியாய் நாம்செத்தால் சாகாச் சொத்தே
　　உயர்அறந்தான் என்ற'மே கலை'யு மெங்கே?
அரும்பரிசு 'விழுப்புண்'தான் இங்கே யென்று
　　அடித்துரைத்த 'புற'மெங்கே? தமிழில் தானே!

கலம்பகங்கள், பரணிவகை, உலாக்கள், கோவை,
　　கரும்பனைய குறவஞ்சி, பள்ளுப் பாட்டு
இலங்குகின்ற பிரபந்தம், தலநூல் யாவும்
　　எடுத்துரைக்கப் பேராவல்; ஆண்டோ ஏது?
கலங்கிவிட்ட தயிரானார் தமிழர் பின்னால்!
　　கட்டுடைந்தே போயிற்று! மொழித்தாய் பெற்ற
விலங்கறுந்தால் அறிவுலகப் படைப்பை யெல்லாம்
　　வீறுதமிழ் அடையாதா?'' என்றான்; சென்றான்.

பூகம்பம் போலேகை யொலிஎ ழும்ப,
　　போர்வீரன் போல்வந்தான் செல்வன்; ஓடி
வேகமுடன் நண்பரெலாம் கைப்பி டித்தே,
　　''வெளுத்துவிட்டாய்; அன்னத்திற் கிதுவே வேண்டும்.
சாகும்வரை நினைவிருக்க அடிகொ டுத்தாய்!
　　தமிழ்மானம் நீகாத்தாய்!'' என்றார்; கன்னற்
பாகிழைந்த சொன்மழைக்கே செல்வன் தங்கப்
　　பரிசுபெற்றான்; நிழல்முத்து தழுவிக் கொண்டான்.

# 6 சந்திப்ப



கொல்லையின் முல்லையோ குவிப்பினும் மணத்தை
இல்லைஎன் பதுபோல் இலைக்குளே இருக்கும்;
எருக்கம் பூதான் இதழினை விரித்துத்
தெருச்செல் வோரையும் திரும்பிட வைக்கும்.
செல்வமோ பொறுமையின் சிமிழாய் இலங்குவோன்;
கல்லூரி முழுதும் கட்டாகச் சேர்ந்தே
புகழாரம் சூட்டினும் புன்னகை யன்றி
அகந்தை கொள்ளாமல் அமைதியாய் நடந்தான்.
அன்றவன் வகுப்பு சென்றுகொண் டிருந்தான்;
தென்றலில் வந்தது தேன்குரல் ஒன்று!
வணக்கம்' என்றஅம் மணந்திடும் சொல்லை
இணக்கமாய் ஓர்குரல் இனிக்க உரைத்திடத்
திரும்பினான்; கண்டான்; சேயிழை அன்னம்
அரும்பிய நகையுடன் அருகிலே வந்தாள்.
'அன்று தங்களின் அழகிய உரைபோல்
என்றும் இதுவரை என்செவி கேட்டதோ?
ஆடிப் பெருக்கோ? ஆர்த்திடும் சூறையோ?
தேடினும் உவமை தெரிந்திலேன்!''
என்றாள் அன்னம்; நன்றிஎன் றான்அவன்!

---

# 7



# உரையாடல்

''ஆமாம்சொற் போரினிலே அடுக்கிவைத்த கருத்தைப்போல்
சீமையின் சரக்கேதான் சிறந்ததென்பீர்'' என்றிட்டான்.
''தமிழாற்றில் எதிர்நீந்தும் தற்குறியும் நானல்லள்;
உமியாவார் தமிழ்த்தாயை உதறியவர் யானறிவேன்!
வாதத்திற் காகத்தான் மறுத்துரைத்தேன் தங்களினை!
பேதமொன்றும் எண்ணாதீர்; பேச்சாற்றல் எனக்கேது?''
என்றுரைத்தாள் நல்லன்னம்; இறும்பூதும் அடைந்த அவன்,
''நன்று, நன்றே உங்களிடம் நானேதான் பொறுத்தருள
வேண்டுதற்கே வரவிருந்தேன்; ஈண்டிங்கே எதிர்ப்பட்டீர்!
மீண்டுமிங்கே கேட்கின்றேன்; மிகையாக நானன்று
சொற்களையே உதிர்த்திருந்தால் சொன்னவற்றைத் தவறாகச்
சற்றேனும் கொள்ளாதீர்! தமிழ்க்குருதி ஓடுகின்ற
உருவமென்று நானறிவேன்! உங்கள்முகம் தெளிவாக்கும்.
கருவெடுப்பார் தமிழரிடம்; கால்பிடிப்பார் வேறிடத்தில்!
அன்னைத் திருநாடோ அவர்களையும் தாங்கிநிற்கும்.
முன்னம்நாம் அன்னவர்க்கு மூட்டிடுவோம் நெடுந்தீயை!
கன்னல்தமிழ் மகளிரெலாம் கையுயர்த்தி எழுந்திட்டால்
மின்னலைப்போல் தமிழ்ப்பகைவர் வேரோடு மறைவார்கள்,''
என்றுரைத்தான் செல்வமகன்; எழுச்சியுடன் அன்னமகள்,
''கொன்றழிக்கப் புகுந்தவரைக் கூறாக்கிப் பொடிசெய்வோம்!
அன்றுமுதல் இன்றுவரை ஆர்ப்பாட்டப் போர்ப்பாடி
சென்றழிந்தோர் எத்தனைபேர்? செப்பிடுமே வரலாறு!''
எனச்சொன்னாள் அறிவன்னம்; இதற்குள்ளே மணியடிக்கத்
தினைக்காட்டுக் கிள்ளைகள்போல் சேர்ந்ததங்கே எல்லோரும்
வகுப்பறையுள் நுழைந்தார்கள்; மடைகிழிந்த நுரையாறு
புகுகின்ற காட்சிக்கே புதுஉவமை கிடைத்ததம்மா!

# 3



# நெஞ்சம் நெஞ்சம்

மெல்லவே நாட்கள் சென்று
　　மேவன; வகுப்பி னின்று
செல்வனும் விடுதி சென்று
　　திறந்தனன் அறையை அன்று!
சொல்லிவைத் ததுபோல் அஞ்சற்
　　சுடர்மடல் விழுந்தி ருக்க,
'நல்லது! அப்பா வேதான்
　　நலங்கேட்டு வரைந்தி ருப்பார்!'

எனஎண்ணிப் பிரித்தான் செல்வன்.
　　எழுத்ததன் எழிலைக் கண்டு
மனத்தெழும் ஆவல் போக்க
　　வரைந்தவர் ஒப்பம் கண்டான்;
கனத்தது நெஞ்சம். ஆமாம்.
　　கன்னியாம் அன்ன மேதான்
கனிச்சாற்றை மையாய்க் கொண்டு
　　கடிதத்தை வரைந்தி ருந்தாள்!

படித்தது அவன்வாய்; ''தூய
　　பண்பாள! வணக்கம். கண்டு
திடுக்குற வேண்டாம்! நானும்
　　திடீரென வரைந்தேன் என்றே!
முடிவேந்தன் குட்டு வன்போல்
　　முன்மார்பை உயர்த்தித் தாங்கள்
சடசடவெனவு திர்த்த
　　தமிழ்மாரி மறக்கப் போமோ?

செவியெலாம் ஒலிமு ழக்கம்;
சேற்கண்ணில் உமது காட்சி!
தவிக்கின்ற நெஞ்சில் ஏனோ
தங்களின் நினைப்பே! வானம்
கவிந்ததோர் உலக மீதில்
காளையர் இருப்பா ரேனும்
அவர்க்குளே தங்க ளைப்போல்
அற்புத மனிதர் உண்டா?

உணர்ச்சியின் பெருக்கால் நானும்
உளறினேன் எனஎண் ணாதீர்!
மணக்கின்ற வாவி தன்னில்
மலர்ந்ததா மரைப்பூ என்றும்
தணற்கதி ரோனுக் கேதான்
தன்னிதழ் விரிக்கும்! நானும்
இணையிலாத் தங்க ளாற்றல்
எழில்கண்டே இழந்தேன் என்னை!

வானத்தில் ஒளிர்வ தெல்லாம்
வளர்மதி யாவதேது?
மீனெலாம் துள்ளு கின்ற
'வெண்வாளை'ஆவ துண்டோ?
ஆனபல் லிளைஞ ரெல்லாம்
ஆவரோ தங்க ளைப்போல்?
நானிதை எழுதும் போது
நகைக்காதீர்! மிகையா சொன்னேன்?

இனந்தெரி யாத அன்பும்

என்நெஞ்சில் சுரப்ப தேனோ?

தினந்தினம் தாங்கள் வந்து

சிரிப்பதேன் கண்ண ரங்கில்?

சுனைநீரில் மூழ்கி னாற்போல்

தூயவர் உம்நி னைப்பில்

புனலாடிக் களிக்கின் றேன்நான்;

பொய்யில்லை! இங்ஙன், அன்னம்.''

முடங்கலை முடித்தான் செல்வன்;

முகமலர் மலர்ந்த தாங்கே.

அடங்கிய பெட்ட கம்போல்

அவளன்று நடந்து வந்து,

தடங்கண்ணால் வணக்கம் கூறி,

தமிழ்ப்பண்பு மிளிரப் பேசி

நடந்ததை நினைத்தான் செல்வன்;

நகைத்தனன் தனக்குத் தானே!

இதற்குள்ளே முத்து வந்தான்;

''என்னப்பா செல்வா! இங்கே

புதர்முயல் இடியைக் கேட்டு

போயொளிந் திருத்தல் போலே

அதிராமல் அமர்ந்தே உள்ளாய்!

அத்தனைப் பேரு மங்கே

குதிப்போட்டு சுற்று லாவைக்

கொண்டாடப் புறப்பட் டாரே!''

''எந்தெந்த இடங்கள் காண

எல்லோரும் செல்லு கின்றார்!

அந்தந்த இடத்தின் மேன்மை

ஆழமாய் அறிதல் வேண்டும்!

இந்தாபார், முத்து! வேண்டாம்.

இத்தனைக் கூட்டத் தோடு

வந்தாலும் எல்லாம் காணும்

வாய்ப்புண்டா?'' என்றான் செல்வன்.

தன்பிடி தளரா முத்து

சரியென்று ஒப்ப வைத்தான்.

அன்பிலக் கியமாய் நிற்கும்

ஆருயிர் முத்தை நோக்கி,

''அன்னங்கள் வருமா? அன்றி

ஆண்களே தாமா?'' என்றான்.

''பொன்னின்றி வயிரத் தோடா?

புறப்பட்டார்!'' என்றான் முத்து.

# ௯ சுற்றுலா



ஓடிய துந்து வண்டி!
　　ஒன்றான நண்ப ரெல்லாம்
பாடினார்; களித்தார்; அன்னப்
　　பாவையோ செல்வன் தன்னைத்
தேடினாள்; நான்கு கண்கள்
　　தின்றன ஒன்றை யொன்று.
‘வேடந்தாங் க’லைஅ டைந்தார்.
　　விரைந்தனர் ஏரி நோக்கி.

**(வேறு)**

நடந்திட்டார் மாணவர்கள் பறவை சூழ்ந்த
　　நல்லுலகக் காட்சியினைக் காண்ப தற்கே!
உடல்சிறுத்த சிட்டு,வக்கா, கொக்கு, நாரை,
　　ஒய்யார மீன்கொத்தி, காடை, வாத்து,
கடற்கோழி, கரிக்குருவி, காடை, உள்ளான்,
　　கவின்அறிவாள் மூக்கன்எனும் பறவை, மேலும்
உடலெல்லாம் வரிவீழ்ந்த பறவை என்றே
　　ஒருநூறு வகைப்பறவை ஒருங்கே கண்டார்!

''பார்அன்னம்! வகைவகையாய்ப் பறவைக் கூட்டம்
　　பகைமறந்தே ஒன்றாக வாழும் காட்சி!
யார்சென்றே ஒற்றுமையை எடுத்து ரைத்தார்?
　　எல்லாமே மனமொத்து வாழக் கண்டோம்!
பார்மீது வாழுகின்ற மனிதன் மட்டும்
　　பாத்திகட்டி பேதத்தை வளர்க்கின் றானே!
சீர்கெட்ட மனிதர்களைப் பார்க்கும் போது
　　சிரிக்காதா இவையெல்லாம்?'' என்றான் செல்வன்.

இதற்குள்ளே ஒருதாயும் குழந்தை ஏந்தி,
ஏக்கமுடன் கைகூப்பி நெருங்கி வந்தாள்;
சதைமறைந்து உள்ளெலும்பு தூக்கி நிற்கத்
தள்ளாடி வந்தவளைக் கண்டான் செல்வன்!
''வதைகின்றோம் பசியாலே; உதவி,'' என்றாள்!
மயானஎலும் புக்கூட்டை ஒத்தாள் சொந்தக்
கதையெடுத்து விரித்துவைத்தாள்; கேட்ட செல்வன்
கரைந்துருகி ''அன்னம்கேள்!'' என்று சொன்னான்.

''பறவையெலாம் கண்டெடுத்த உணவை இங்கே
பகிர்ந்துண்டே பசியாற விலையா? பாழும்
சிறுநெஞ்சம் ஏன்பெற்றான் மனிதன் மட்டும்?
செத்துசிலர் மடிவதுமேன்? சிலபேர் இன்பம்
பெறுவதும்ஏன்? இருக்கின்ற சமுதா யத்தின்
பிழைஎங்கே நாம்அறிய வேண்டும்; கண்டு
நொறுக்கியதைத் துகளாக்கிப் புரட்சி யாற்றில்
நுரையோடு நுரையாகக் கலக்க வேண்டும்.

இங்குள்ள பறவையெலாம் ஏரி வற்றி
இருக்கின்ற நீரெல்லாம் ஆவி யானால்
தங்கியுள்ள இடம்விட்டுப் பறக்கும்; எங்கே
தக்கஇடம் காண்கிறதோ செல்லும்; வாழும்!
பொங்குகடல், மலைதாண்டி, கண்டம் தாண்டிப்
போய்ச்சேரும் 'ஐரோப்பா' வரையு மென்றால்
சங்கைகெட்ட மனிதன்மட்டும் எல்லை கட்டித்
தடைபோட்டு வாழ்வானேன்? இதுவா நீதி?

படைப்பினிலே வேற்றுமைஏன்? இயற்கை தந்த
பசுமையெலாம் வளமெல்லாம் பொதுமை தானே!
விடைசொன்னால் உலகத்தின் ஆறு கண்டம்
விளைத்துள்ள அறுநூறு கோடி மக்கள்
அடைந்துள்ள பொதுவீடே கோளம்; ஆனால்
அப்பப்பா! பாழ்மனிதன் ஆசைச் சந்தைக்
கடைச்சரக்காய் ஆக்கிவிட்டான் நீதி தன்னை!
கள்ளியெலாம் நெல்வயலில் செழிக்கக் கண்டோம்.

தமிழகத்தில் இன்றுள்ள பறவைக் கூட்டம்,
'சைபீரிய'ப் பகுதிக்கு நாளை செல்லும்;
அமைதிநிறை வாழ்க்கையங்கே கிடைக்கா விட்டால்
அரேபியப் பகுதிக்குப் பறந்து செல்லும்!
உமிபோன்ற சிலநாட்டு மனிதர் மட்டும்
உண்டலுத்தே எஞ்சிவிட்ட உணவை யெல்லாம்
திமிரோடு கடலினிலே எறிவ தேன்?ஏன்?
தீயிட்டுக் கொளுத்துவதேன்? நேர்மை எங்கே?

'சிட்னி'யிலே வாழ்ந்தாலும் கோள உச்சித்
திகழ்கின்ற 'கிரீன்லாந்'தில் வாழ்ந்திட் டாலும்
கிட்டவில்லை உணவென்று சாக்கா டேகும்
கிளைப்பறவை உலகிலுண்டா? ஆனால் உள்ள
முட்டாள்கள் ஒருசிலரோ வயிற்றுக் கேங்கி
முடிப்பதும்ஏன் தூக்கேறி உயிரை இன்னும்?
கட்டாயம் சமதருமப் புரட்சி வேண்டும்;
கனத்தலையை விறகுதலை சீவ வேண்டும்!''

செல்வத்தின் உரைகேட்டு நெகிழ்ந்த அன்னம்,

''செகமெல்லாம் செல்வங்கள் தோன்றி விட்டால்

செல்வமெலாம் ஓரிடத்தில் குவிந்தி ருக்கும்

தீச்சட்டம் செல்லாமற் போகும்!'' என்றாள்.

''செல்லம்மா இதைவாங்கி'', என்று காசைத்

திக்கற்றாள் கையினிலே வைத்தான் செல்வன்.

எல்லோரும் சென்னைக்குப் புறப்பட் டார்கள்;

இசைப்பாட்டு முழங்கியதே ஊர்திக் குள்ளே!

# 10
# கனிந்தது காதல்

கார்கடலின் ஓசையிலே காதும்பிப் பாட்டினிலே
தேர்அன்னம் செல்வத்தின் சீர்க்காதல் - வேரோடி
நித்தம் வளர்ந்ததடீ! நெஞ்சங்கள் ஒன்றிவிட்டால்
இத்தரையில் சொர்க்கமா இல்லை?

# 11



# ஊருக்கு அழைப்பு

நெடுநேரம் கழித்து விடுதிக்குத் திரும்பிய
தோழன்செல்வனை சுடர்முத்து கேட்டான்:
''நாழி கழித்துநீ நாள்தொறும் வருகிறாய்!
என்ன காரணம்? ஏடும் நூல்களும்
உன்னரும் துணையாம்! ஒருவார காலம்
தனியே செல்கிறாய்; தனியே வருகிறாய்.
எனக்கதை விளக்க ஏன்மறுக் கின்றாய்?''
என்றே கேட்டான் நன்முத்து; செல்வன்,
''ஒன்றுமே யில்லை உன்னிடம் சொல்வதில்.
அகநா னூற்றின் அருமையை இதுவரைத்
தொகையாம் ஏட்டில் சுவைத்திருக் கின்றேன்.
நூலுரைக் காத நுண்பொருள் எல்லாம்,
நூலிடை அன்னம் நுவல்விழி காட்டும்!''
என்றான் செல்வன்; இடையே முத்து,
''சென்னை வந்ததேன்? தெரியுமே செல்வா!
நமது பாதையை நான்சொல வேண்டுமா?
எல்லாம் அறிவாய்; எதற்கும் நானும்
உன்நினை விற்கே உணர்த்தினேன்!'' என்றான்.
''தெரியும் தோழா! புரியுமே எனக்கும்!
திருமணம் என்றுநான் செய்திடின் வாழ்வில்
அருமை அன்னத்தை அன்றிவே றொருத்தியை
தீண்டவும் மாட்டேன்; திண்ணம்ஈ தாணை!
ஆண்டவ ரானஎன் அன்னையும் தந்தையும்

எங்களின் காதலுக் கிணங்கவே செய்வர்,''
இங்கிதை அவன்சொல, எவனோ ஒருவன்
தந்தி யொன்றினை வந்து கொடுத்தான்.
முந்தி வாங்கிய முத்து பிரித்தான்.
''அப்பா தந்தியை அனுப்பியே உள்ளார்;
இப்போ தேநாம் புறப்பட வேண்டுமாம்!''
என்றான் முத்து; இருவரும் கிளம்பினர்.
சென்றது காரும் சேலூர் நோக்கியே!

---

# 12

# மைந்தனும் தந்தையும்



வாவியிலே தங்கநிற அரிஞ்சேல் துள்ளும்;
        மாதர்முகப் பொய்கையிலே கொலைவேல் துள்ளும்;
பூவிரிந்த இதழ்களிலே வண்டு துள்ளும்;
        பொன்சுமந்த நெற்கதிரில் அழகு துள்ளும்;
சாவியில்லா வயல்களிலே சிட்டு துள்ளும்;
        தன்மான உழவரிடம் மகிழ்ச்சி துள்ளும்;
மாவினிலே இணைக்குயில்கள் இசையோ துள்ளும்;
        மனமீர்க்கும் சேலூரை அடைந்தார் நண்பர்.

இதழ்விரிய, நெஞ்சமெலாம் விரிய, அங்கே
        எழில்அண்ணா மலையாரும் துணைவி யாரும்
மிதமிஞ்சும் உவகையுடன் வரவேற் றார்கள்;
        மேன்மேலும் கேள்வியின்மேல் கேள்வி போட்டுக்
கதையெல்லாம் கேட்டுணர்ந்தார்; மெல்லச் செல்வன்,
        ''காரணந்தான் என்னப்பா? விரையச் சொன்னீர்!''
இதைக்கேட்டுத் தந்தைமுகம் பார்த்தான்; தந்தை
        எண்ணத்தை அவனிடமே விரித்து வைத்தார்.

''பிறந்தாய் நீ! மகப்பேற்றைப் பெற்ற தாலே
        பிறந்ததிந்த இல்லத்தில் மகிழ்ச்சி; பின்னர்
சிறந்ததொரு கல்வியினைப் பெற்றாய்; உன்றன்
        திறன்கண்டு இன்பத்தில் திளைத்தோம்; நெஞ்சைத்
திறந்திடநான் ஏன்அஞ்ச வேண்டும்; தம்பி!
        திருமணத்தை முடித்திடவே எண்ணு கின்றேன்.
வெறுஞ்சொல்லா சொன்னார்கள்? பருவம் பார்த்து
        விதைத்தால்தான் மகசூலும் பெருகும்!'' என்றார்.

இதுவரைக்கும் இதழ்விரிக்கா திருந்த முத்து,

''எங்கப்பா மணமுடிக்க எண்ணி யுள்ளீர்?

அதைமுதலில் கூறுங்கள்,'' என்றான். அப்பா,

''அடுத்துள்ள பாலூரின் பண்ணைக் காரர்

முதிராத பனநுங்கைப் போலே உள்ள

முறைமகளைத் தருவதற்கு விழைந்தார்; பூவில்

சதிராடும் தென்றலைப்போல் சுழலும் அந்தத்

தையலைநான் நேர்கண்டேன்; சிலைதான்!'' என்றார்.

இதைச்சொல்லி முடிப்பதற்குள் தயங்கி முத்து,

''ஏனப்பா அப்பெண்ணைத் தேர்ந்தெ டுத்தீர்?

இதைஏன்முன் செல்வனிடம் சொல்ல வில்லை?''

எனக்கேட்டான்; புன்சிரிப்பை உதிர்த்து விட்டு,

''சதைவேறு, நகம்வேறா? செல்வன் வந்து

சரிஎன்பான் என்றஎண்ணம் உண்டு முத்து!

பொதிநெல்லால் மலைசமைக்கும் பாலூ ரார்தான்

பொருந்திவரும் உறவாளர்!'' என்றார் தந்தை.

வாயவிழா மொட்டைப்போல் இருந்த செல்வன்,

''மணங்கமழும் பூங்காவாய் எனைவ ளர்த்தீர்!

பாய்கின்ற திக்கிலெலாம் அணைபோ டாமல்

பாயவிட்டீர்! நான்விரும்பிக் கேட்ட தெல்லாம்

ஓயாமல் அளிப்பதற்கும் தயங்கி னீரா?

உலகத்தில் நான்பெற்ற தந்தை யைப்போல்

ஆய்ந்தாலும் இவ்வுலகில் யார்தான் பெற்றார்?

அணுவெல்லாம் நெஞ்சமெலாம் நீங்கள் தானே!

விழிமூடிக் கிடந்தஎன்னை படிப்பென் கின்ற
விழுங்கல்வி யால்திறந்தீர்! வாழை யைப்போல்
பழிமூடா நம்குடிக்குப் பெருமை தேடப்
பக்குவமாய் எனைவளர்த்தீர்! எனக்கோ என்றும்
வழிகாட்டும் சுடர்விளக்காய் ஆனீர்! தங்கள்
மனங்கோண இதுவரைநான் நடந்த துண்டா?
எழிலான திருமணத்தில் மட்டும் சற்றே
என்கருத்தைச் செவியேற்க வேண்டு கின்றேன்.

''என்னப்பா சொல்வதற்கு விழைகின் றாய்நீ?''
எனக்கேட்டார் அருந்தந்தை; செல்வன் சொன்னான்;
''சென்னையிலே தங்களுக்குப் பொருத்த மான
சீரார்ந்த மருமகளைத் தேடிக் கண்டேன்.
பெண்களெலாம் பருவத்தில் எழிலாய்க் காண்பர்;
பேசுமிவள் வள்ளுவரின் பெண்மைப் பண்பைக்
க்ண்ணேபோல் போற்றுபவள்; தாங்கள் சென்று
கண்டபின்னர் நன்முடிவு சொல்வீர்!'' என்றான்.

''நம்குடியைப் போல்வசதி உண்டா செல்வம்?
நம்சாதி அவள்தானா?'' என்றார் தந்தை.
''இம்மண்ணில் தாங்கள்எனக் கீந்த கல்வி
ஏடுகளின் பெயராலே கேட்பேன், அப்பா!
செம்மண்ணின் வயல்களிலே ஒன்றுக் கொன்று
சீரின்றி மேடுபள்ளம் கொண்டி ருந்தால்
அம்மண்ணில் மேட்டுமண்ணை பள்ளம் கொட்டி
அழகாகச் சமப்படுத்த விலையா நாமும்?

செல்வரெலாம் செல்வருடன் சேர்ந்து கொண்டால்

சீரான சமதர்மம் பூப்ப தெந்நாள்?

கல்வைர நகையிங்கே நம்மி டத்தில்;

கன்னல்தமிழ்ப் பண்புநகை அவளி டத்தில்!

இல்லைஎன்ற நிலையில்லை நம்மி டத்தில்;

எடுத்தழியா குணச்செல்வம் அவளி டத்தில்!

சொல்லுங்கள் பொருந்தாதா இம்ம ணந்தான்?

சுடர்த்தங்க மலையாலே என்ன நன்மை?

சாதியினைக் கேட்டீர்கள்; 'ஜாதி' என்ற

தரங்கெட்ட சொல்என்றும் தமிழில் ஏது?

பாதியிலே பாதகரால் திணிக்கப் பட்ட

படுமோசப் பொய்வேலி 'சாதி'யன்றோ?

ஆதலினால் மணவாழ்வு இனிக்க வேண்டின்

அடுத்துள்ள உறவுக்குள் மணத்தல் தீதே!

ஈதெல்லாம் அறிவியலார் வலியு றுத்தும்

எடுப்பான வாதமன்றோ? மறுப்பும் உண்டா?

முதுகெலும்பைப் பெற்றதிரா விடத்தார் இங்கே

முழுஉரிமைத் தாயகத்தை ஆளும் போது,

சதிராடும் 'சாதி'எனும் கொடிய பேயைச்

சல்லசல்லி யாய்க்கிழித்துச் சாம்ப லாக்கிக்

குதித்தோடும் கங்கையிலே கொண்டு சென்று

குளிர்நீரில் கரைத்துவிட்டுத் திரும்பா ரோ?நல்

'விதிச்சட்டம் வள்ளுவ'மாய் மாறும் போது

வேற்றுமைகள் ஏதப்பா? பறந்தி டாதா?''

''சொல்வதெலாம் உண்மையப்பா! அக்கம் பக்கம்
தொடுத்திடுமே பழிமொழியை! என்ன செய்வோம்?''
கல்லெறிந்த குளம்போல கலக்கத் தோடு
கணைக்கேள்வி தொடுத்திட்டார் தந்தை; செல்வன்,
''புல்தாக்கி மடிந்தவர்கள் உண்டா? இந்தப்
புழுவனைய சமுதாயத் திற்கா அச்சம்?
செல்கின்ற பாதையிலே செல்வோம்; நாளை
திரும்பிவரும் நம்வழியில் நாடும்!'' என்றான்.

செல்வத்தின் சொல்கேட்ட தந்தை சொன்னார்;
''சென்னைக்கே புறப்படுவோம்; நீவி ரும்பும்
செல்வியையே மணமுடிப்பாய்!'' என்றார். செல்வன்
தேனாற்றில் போய்வீழ்ந்தான்; அணைத்தான் முத்து.
எல்லாமும் முறையாக நடந்த பின்னர்
இனிக்கின்ற திருமணத்தை முடித்துக் கொண்டு
கல்லாமல் மிச்சம்விட்ட இல்ல றத்தில்
கால்வைத்தான் செல்வமகன் அன்னத் தோடு!

---

# 13



# கற்ற மேதை

மணவூரின் வழிச்சென் றாலும்
        வளக்கல்வி மறந்தா னில்லை!
கணத்தையும் வீணாக் காமல்
        கவின்வர லாற்று நூல்கள்,
மணஞ்சேர்க்கும் இலக்கி யங்கள்,
        மண்ணூல்கள், பொருள்நூல் எல்லாம்
கணக்கின்றிப் படித்தான் செல்வன்;
        கற்றசீர் மேதை யானான்!

---

# 14 அழைப்பு வந்தது



செல்வனோ வகுப்பறை சென்றுகொண் டிருந்தான் .
வில்லின் அம்புபோல் விரைந்தோடி வந்த
முத்து கூறினான், ''இத்தினம் மாணவர்
வைத்துள மன்றில் அத்தனைப் பேரும்
கூடுகின் றார்கள்; குழுவுக் கேஉனை
கட்டாயம் வந்து கலந்து கொள்ளவே
இட்டுவா என்றே என்னை அனுப்பினர்!''
என்றனன் முத்து. ''என்ன கூட்டமாம்?
சொன்னால் தானே தொடர்பு விளங்கும்!''
கேட்டான் செல்வன். ''கேள்வியை அங்கே
போட்டபின் உனக்குப் புரியும் விளக்கம்,''
என்று சிரித்தான். இருவரும் குழுவுக்
கொன்றாய் ஏகினர்; மன்றில் நுழைந்ததும்
கண்ட மாணவர் கையொலி எழுப்பி,
மண்டிக் கிடந்த மகிழ்ச்சியைக் காட்டினர்.
எழுந்தான் செயலன், ''இப்போது நாமெலாம்
குழுமிய காரணம் கூற விழைகிறேன்;
மாணவர் உலகமே நீணில மீது
காணும் துயரினைக் கண்டு துடிக்கும்.
அரக்க நெஞ்சத்து அரசியல் வாதிகள்
இரக்கமே யின்றி எத்தனை யோபல
நிகழ்ச்சியை யெல்லாம் இகழ்ச்சியாய் விட்டனர்.

புகழும் பொருளும் நகம்சதை அவர்க்கே!
நாமப் படியா? தீமைஎங் கிருப்பினும்
ஓமப் பொடிபோல் உடைப்போம் பாய்ந்தே!
சிலஆண் டாகவே 'தென்னாப் பிரிக்கா'வில்
விலங்குணர் வுடையோர் வெறியினைக் கிளப்பி,
வெண்மை கருப்பென வேற்றுமை எழுப்பி,
உண்மையி லிங்கே உலகினர் வெறுப்பினைத்
தேடிக் கொண்டதைத் தெரிந்தே இருப்பீர்!
வாடிக்கை யாக நீடித்த கொடுமையோ
உச்சியைத் தாண்டி ஓங்கி வளர்ந்தது.
சச்சர வங்கே தலைவிரித் தாடவே
எங்கும் கலவரம்; எங்கும் களரி;
பொங்கிடும் மூன்றாம் புவிப்போர்க் கதவைத்
திறக்குமோ இதுவென திகில்பர விற்று.
அறம்பின் வாழுமா? ஆதலால் அச்சம்
பெருகிடக் கண்டோம்; பீடையாம் போரை
உருவா காமல் ஒடுக்கிட ஐ.நா.
எடுக்கும் முயற்சிக் கேஒத் துழைப்பினைக்
கொடுக்கும் வகையில் குவலயத் துள்ள
உலகப் பல்கலைக் கழக மாணவர்
பலரும் தம்தம் பங்காய்ச் சிலரை
அனுப்பிட வேண்டுமாம். யாரை அனுப்புவோம்;
வனப்பும் ஆற்றலும் வாய்ந்தவர் தேவை!''
என்று கூறியே அன்னவன் முடித்தான்.
''நன்றுநம் செல்வனை இன்றே அனுப்புவோம்;
குன்றி மணிக்குக் குறைதான் ஏது?''
என்றே அனைவரும் எடுத்தார் கைகளை!

செல்வனின் ஒப்புதல் தெரியக் கேட்டார்.
''நல்லது செல்கிறேன், எல்லோர் குரலையும்
முடிந்த வரையில் முழங்குவேன் அங்கே
விடிந்தால் காரிருள் விடிக!''
என்றான் செல்வன்; எழுந்தது வாழ்த்தொலி!

# 15 ஆப்பிரிக்க மண்ணில்



இருட்கண்ட ஆப்பிரிக்க மண்ணின் மேலே
　　இறகசையா விமானமது பறந்த தம்மா!
குருட்டுலகம் விழிக்காத அந்த நாளில்
　　'குவலயமே! நாகரிகம் இதுதான்!' என்று
பொருட்கூறி விளக்கியதோர் 'எகிப்'தைக் கொண்ட
　　பொலிவார்ந்த 'ஆப்பிரிக்க' மண்ணா ஈது?
அருட்பார்வை 'நைல்நதி'யைப் பெற்ற தாலே
　　அகிலத்தை மலைக்கவைத்த பூமி தானா?

இதுபோன்ற சிந்தனையில் மிதந்தான் செல்வன்;
　　எலும்பில்லா மேகத்தில் புகுந்து வந்த
அதிநீளச் சிறகுடைய விமானம் பாய்ந்து
　　ஆப்பிரிக்கத் தென்கோடி அடைந்த தம்மா!
பொதிமரங்கள், காட்டாறு, சிங்கம் வாழும்
　　புதர்நிறைந்த இருட்சதுப்பு இவற்றைக் கண்டே
இதில்ஆட்சி புரிவோர்க்கே இதயம் கூட
　　இருண்டுவிட்ட காரணத்தை உணர்ந்தான் செல்வன்!

தென்னாப்பி ரிக்காவின் மண்ணில் காலை
　　செல்வமகன் வைத்திட்டான்; அவனைப் போலே
இன்னுமுள்ள நடுநிலைமை நாட்டி னின்றே
　　எவர்எவரோ ஐ.நா.வின் துணையால் வந்தார்.
புன்னகையால் புன்னகையை வாங்கிக் கொண்டு,
　　பொருள்புதைந்த உரையாடிக் கலந்தான்; பின்னர்
அன்னவர்க்கே ஏற்பாடு செய்த, நல்ல
　　அழகார்ந்த விடுதிக்குச் சென்ற டைந்தான்.

நிறவெறியால் பெருங்கனலை அணைக்க வந்த
நெஞ்சகன்ற மாணவர்கள் ஒருங்கே சேர்ந்தார்!
சிறகடித்து வான்மீதில் கொக்குக் கூட்டம்
சீர்அணியாய்ச் செல்வதைப்போல் நடந்தார்; மிக்கச்
சிறப்பான சொல்பொதிந்த அட்டை தாங்கி,
'செகத்துள்ள மாந்தருக்குள் உயர்வு தாழ்வேன்?''
அறவுரைகள் இதைப்போலே எழுப்பிக் கொண்டே
அகன்றதொரு பெருந்திடலை அடைந்தார் எல்லாம்!

ஒவ்வொருநாட் டிளைஞர்களும் எழுந்தார்; நெஞ்சை
உருக்குகின்ற சொன்மாரி பொழிந்தார்; தூதின்
'அவ்வை'வந்த தமிழ்நாட்டுச் செல்வன் பின்னர்,
ஆங்கிலத்தில் கருத்துரைகள் தரவெ ழுந்தான்!
''செவ்வியஎன் சோதரரே! அன்னை யோரே!
தென்ஆப்பி ரிக்காவின் மண்ணி லிங்கே
கவ்வியதோர் நிறபேதம் குறித்தே நானும்
கருத்துரைக்க விழைகின்றேன்; செவியைத் தாரீர்!

கல்தோன்றி, மண்தோன்றி, நீரும் தோன்றி,
கடலுயிர்கள் பின்தோன்றி, பறவை தோன்றி.
பல்லுயிர்கள் தோன்றியபின், குரங்கு தோன்றி
பண்புடைய மனிதரெலாம் தோன்றி னாராம்!
வெல்லரிய மனிதனவன் விலங்கை யெல்லாம்
வெற்றிபெற்று தனக்கடிமை செய்தான்; ஆனால்
சொல்லுகின்ற மிருகமெலாம் இணைந்தே வாழும்;
சுடர்அறிவு பெற்றவர்நாம் பேதம் கண்டோம்!

கருப்புநிற வண்டோடு சிவப்பு வண்ணக்

கவின்ரோஜா காதல்செய விலையா? நல்லக்

கருப்புநிறக் குயிலிசைக்கே பொன்வண் ணத்துக்

கான்மயிலும் ஆடுவது இலையா? வானக்

கருப்புநிற முகிலோடு தங்க மின்னல்

கட்டிமுத்தம் தரவிலையா? இன்னும் சொன்னால்

கருப்புநிற இரவுதரும் இன்பம் தன்னை

காசினியில் தள்ளுபவர் யார், யார் இங்கே?

பலநிறத்துப் புறாக்களெலாம் கூடி நின்றே

பண்போடு உறவாட விலையா? பூக்கும்

பலநிறத்து மலர்களெலாம் ஒருச ரத்தில்

பளபளக்கச் சேர்வதிங்கே இலையா? ஆனால்

பலநிறத்து மனிதர்மட்டும் ஒன்று சேர்தல்

பாரினில்ஏன் முயற்கொம்பாம்? இல்லை யென்றால்

விலங்கினின்று வேறுபட்டோம் என்றே மெத்த

வீம்புரைகள் நிகழ்த்துவதில் பெருமை என்ன?

வெள்ளையர்கள் கருப்பரென்று உடல்நி றத்தில்

வேற்றுமையா? பூங்காவில் அமர்வ தற்கும்

உள்ளபல இருக்கைகளும் தனியா? இங்கே

உருண்டோடும் ஊர்திகளில் பயணம் செய்ய,

வெள்ளையர்க்கும் கருப்பருக்கும் பிரித்து வைத்த

வேறிடங்கள் இருப்பானேன்? அய்யோ! இங்கே.

வெள்ளையர்க்கும் கருப்பருக்கும் இரத்தம் சேர்க்கும்

விடுதிகளும் தனித்தனியாம்! குருதி வேறா?

மனிதருக்கும் மனிதருக்கும் உயர்வு தாழ்வேன்?
'மகான் காந்தி', உயர்'லிங்கன்' ஆகி யோரின்
புனிதஉயிர் பிரிந்ததெலாம் இதற்கா? எங்கள்
புகழ்பூத்த 'வள்ளுவன்'சொல் கேளீர்! பேதம்
தனித்தனிஏன்? 'பிறப்பொக்கும் உயிர்கள்' என்றார்!
தாழ்வுயர்வு மாந்தருக்குள் இல்லை யென்றார்!
இனியுமிந்த இருபதாம் நூற்றாண் டில்நாம்
ஏனிந்த நிறப்போரை மூட்ட வேண்டும்?

தோலினிலே கருமைசெம்மை எவரின் குற்றம்?
தோற்றுவித்த படைப்பாளன் குற்றம் தானே?
பாலுக்கு வெண்மைநிறம் தந்தான்; சூழ்ந்தே
பரந்திருக்கும் வானுக்கு நீலம் தந்தான்.
தோலுக்குள் வேற்றுமைஏன் படைத்தான் பாவி?
துவளாத போராட்டம் மூட்டி விட்டான்!
காலினிலே துவைத்திடுவோம் வெறிப்பே தத்தை!
கடவுளவன் மூலமென்றால் அவனைத் தீர்ப்போம்!

நகருகின்ற பாறைகளாம் எருமை தன்னை
நயத்தோடு நீர்தொட்டுப் பால்க றப்பீர்!
செகத்தினிலே மனிதரையே மனிதர் தொட்டுத்
தீண்டாமல் ஒதுக்குவதா நீதி? உங்கள்
அகங்களிலே நாயினுக்கே உணவு தந்து
அன்போடு படுக்கையிலே சேர்ப்பீர்! ஆனால்
முகங்கருத்த பெண், வெள்ளைக் காரன் தன்னை
முழுமனத்தால் மணந்திட்டால் தவறா? சொல்வீர்!

உலகத்தின் ஆறுகண்ட மக்க ளெல்லாம்
உருக்கமுடன் வேண்டுவதைக் கேட்பீர்! தீய
கலகத்தின் முளைஅரும்பி விட்ட தென்றால்
கடும்விளைவால் நாடெல்லாம் எரிந்தே போகும்!
விலகட்டும் பேய்மாயை! கருநி றத்தார்,
வெள்ளையர்கள், இந்தியர்கள் என்றே உள்ள
அலகைவெறி நெடுந்தீயில் போய்மா ளட்டும்!
அனைவரிங்கே சமம்என்றே சொல்வீர்!'' என்றே,

முழங்கிநின்றான் தமிழ்ச்செல்வன்; இதற்குள் ஆங்கே
மூண்டதம்மா பாழ்க்கலகம்! அவன்மேல் பாய்ந்து
மழைபோன்று விழுந்ததம்மா கற்கள்! தேங்கும்
மடைஉடைந்த காட்டாறாய்ச் சிலர்பு குந்தார்!
அழுகையொலி; புழுதியெழும் ஆர வாரம்;
அடடாவோ! இதற்கிடையே எங்கி ருந்தோ
கழுதைக்கே பிறந்தமகன் ஒருவன் செல்வக்
காளையினைத் துப்பாக்கி யாலே சுட்டான்!

கொள்கைவெள்ளம் பாய்ச்சிநின்ற செல்வன் பச்சைக்
குருதிவெள்ளம் தனில்நீச்ச லிட்டான்; கண்டோர்
அள்ளியவன் உடலத்தை எடுத்தார்; அன்னோன்
அன்றலர்ந்த மலர்போலே சிரித்தான்; சொன்னான்:
''உள்ளத்தால் உயர்ந்திடுக மாந்தர்; இந்த
உலகத்தைக் 'குறள்சட்டம்' ஆள்க! என்னைக்
கள்ளமிலாத் தமிழ்நாட்டிற் சேர்ப்பீர்!'' என்றான்;
காலமெலாம் திரும்பாத திசைக்குச் சென்றான்!

---

16



# இறந்தும் இருந்தான்

பறந்தது செல்வன் மேனி

பைந்தமிழ் நாட்டை நோக்கி!

நிறைந்தது கண்டோர் கண்ணில்

நீள்கடல் அலையைத் தேக்கி!

உறைந்தது உலகோர் நெஞ்சில்

உயர்தூய அன்னோன் கொள்கை!

**சிறந்தது தமிழர் நாடு**

**'செல்வ'னைப் பெற்ற தாலே!**

- முற்றும் -

# ஆன்றோர் மதிப்பீட்டில் ஆசிரியர்



‘கவிஞர் கா. வேழவேந்தன் எழுச்சிபெற்ற திருவிடத்தின் சிறப்பினை விளக்கும் ஆற்றல் மிக்க எழுத்தாளர்; எழுத்தால், பேச்சால் என் நன்மதிப்புக்கும் நட்புக்கும் இலக்கானவர்.’



‘திராவிட இயக்கத்தின் இளந்த லைமுறைக் கவிஞர்களில் சிறந்தவர் கவிஞர் கா. வேழ வேந்தன்; இவர் எழுதிய கவி தைகள் நம்மைக் குற்றாலத் திற்கு அழைத்துச் செல்லா மல், குற்றாலத்தையே நம் முன்னால் கொண்டுவந்து நிறுத்துகின்றன.’